# செந்தமிழ்ச் செல்வி






## உள்ளுறை



சிலம்பு-௫௨] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௯ ஆவணி Sep. 78 [பரல்-௧

Vol. LIII (செ.) 66-3 1978—79




The South India Saiva Siddhanta Works

 Publishing Society, Tinnevelly, Ltd.,

Madras-1 Tirunelveli-6. Madurai-1. Coimbatore-1,

Kumbakonam-1. Tiruchirappalli-2.

# உள்ளுறை

# படங்கள்

**அருட்செல்வர் தி. செ. விசுவநாத பிள்ளை அவர்கள் படத் திறப்பு விழா (15-2-79)** ௬௫௨

1. அருட்செல்வர் தி. செ. விசுவநாத பிள்ளை அவர்களின் திருவுருவப் படத்தினைக் கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் திறந்து வைத்தல்.

2. படத் திறப்பு விழாவில் கலந்துகொண்ட கழகத் தலைவர் உயர் திரு. மு. காசிவிசுவநாதன் செட்டியார், கழகச் செயற்குழு உறுப்பினர் திரு. நெ. சுப்பிரமணிய பிள்ளை.

**திரு. டி. பி. சந்தானகிருட்டிண நாயுடு, பி.ஏ., எல்.டி. மறைவு** ௬௫௬

**திருச்சி பொ. மாணிக்கவாசகம் பிள்ளை பவள விழா** ௪௦௪

1. திருச்சி தமிழ்ச் சங்கத் தலைவர் திரு. இரா. கிருட்டிண சாமி ரெட்டியார் அவர்கள் விழாச் செல்வருக்குப் பொன்னாடை போர்த்தி விருதினை அளித்தல்.

2. செட்டிநாட்டரசர் டாக்டர் சர். முத்தையா செட்டியார் அவர்கள் தலைமை தாங்கி விழாச் செல்வரைப் பாராட்டிப் பேசுதல்.

**பாமல்லபுரத்தில் வான்புகழ் வள்ளுவர் சிலை** ௪௪௮

**திருவள்ளுவர் சிலை நினைவாலயம் கால்கோள் விழா கன்னியாகுமரி (15–4–79)** ௪௪௮

1. மறைமலையடிகள் நூல் நிலையம் அமைத்த திருக்குறள் நூற்காட்சியினை, மத்திய எரிபொருள் அமைச்சர், மாண்புமிகு பா. இராமச்சந்திரன் அவர்கள் திறந்து வைத்தல்.

2. கழக ஆட்சியாளர் மத்திய அமைச்சருக்குத் திருவள்ளுவர் விழா மலரைப் பரிசாக அளித்தல்.

**கன்னியாகுமரி தொடர்வண்டி நிலையத் திறப்பு விழா (15-4-79)** ௪௪௯

1. கன்னியாகுமரி தொடர்வண்டி நிலையத்தில் முதல் வண்டியை இந்தியத் தலைமை அமைச்சர் மாண்புமிகு மொரார்ஜி தேசாய் அவர்கள் ஓடவிடுதல்.

2 குமரிமுனையிலிருந்து திருவனந்தபுரத்திற்குப் புறப்படும் புதிய தொடர்வண்டி.



நூற்றாண்டு விழாக் காணும்
தந்தை பெரியார்



தமிழ்நாட்டு
முன்னாள் முதலமைச்சர்
பேரறிஞர் அண்ணா

செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

சிலம்பு ருங | திருவள்ளுவர் ஆண்டு உ௦௦௯, ஆவணி செப்டம்பர் 1978 | பரல் க

# தமிழ் நாட்டில் இந்தி

கடந்த சில நூற்றாண்டுகட்கு முன்னர்ப் பன்மொழிக் கலவைத் திரிமொழியாக உருவாகியதும், செம்மையான இலக்கண வரம்போ இலக்கிய வளமோ பிறபிற சிறப்புக்களோ ஒரு சிறிதும் இல்லாததும், ஒரேமொழியெனக் கூறப்படினும் ஏறத்தாழ எண்பது மொழிகள் என்னுமளவிற்கு வேறு பாடுகளைக் கொண்டுள்ளதும், ஒவ்வொரு பகுதியினர் பேச்சு வழக்கும் மற்றைப் பகுதியினருக்கு இயல்பாக விளங்காததும், செயற்கை நடையினதுமான இந்தி மொழியை, மொழியாலும் சமயத்தாலும் பண்பாடு கலை நாகரிகம் மற்றும் வாழ்வியல் நடைமுறைகளாலும் வேறுபாடும் மாறுபாடும் பல்வேறு கூறுபாடுமுடைய இனத்தவர்களைக் கொண்ட இந்தியத் துணைக் கண்டத்தின் ஒரே ஆட்சிமொழியாக்கிவிடல் வேண்டுமென்று இந்திய நடுவணரசினர் விடாப்பிடியாய்த் தொடர்ந்து முயன்றுவருகின்றனர்.

ஏழைமை நிரம்பியதும், கல்வியறிவு பெருகாததும், தொழில் வளம் சிறவாததும், வேற்றுநாடுகட்குக் கடன்பட்டுக் கிடப்பதும், அண்டை அயல் நாட்டினரால் அடிக்கடி பொருதப்படுவதும், வேலையற்றோர் தொகை நாளும் நாளும் பெருகுவதுமான இத் துணைக்கண்ட அரசின் வருவாயில் பெருவாரியான தொகை இந்திமொழி வளர்ச்சிக்கெனத் தொடர்ந்து பாழாக்கப்பட்டு வருகின்றது. இந்திக் கல்வி, நூல்வெளியீட்டுத் துறைகளும், இந்தியைப் பரப்பும்பொருட்டு அங்கிங்கெனாதபடி

எங்கெங்கும் நிறுவப்பட்டிருக்கும் அவைகளும் ஏராளமான தொகையை விழுங்கி ஏப்பமிடுகின்றன.

இந்தியாவிலுள்ளோர் அனைவரும் தத்தம் தாய்மொழியையும் ஆங்கிலத்தையும் பயின்று கல்வி கலையாகிய அறிவுத் துறைகளில் மேம்பட்டும், அண்டை அயல் மாநிலத்தவர் நாட்டினரொடு நட்புறவு கொண்டும் வாழும் முறை எளியதும் சிறந்ததுமாயிருக்க அதனை விட்டு, நூற்றுக்கு 60 விழுக்காட்டினர் கல்வியறிவு பெருத - பெறமுடியாதவர்களாகவும், 20 விழுக்காட்டினர் எழுத்தறிவு மட்டுமே பெற்றவர்களாகவும் இருக்கும் இத் துணைக் கண்டத்தில் பெரும்பான்மையோருக்கு அயன் மொழியானதும், செயற்கையானதுமான இந்தியை இத் துணைக் கண்டம் முழுமைக்கும் ஆட்சிமொழி யாக்குவதென்பது கண்ணைத் திறந்துகொண்டே கிணற்றில் விழுவதோடொப்பதன்றி வேறென்னை ?

மாநிலங்கள் தத்தம் தாய்மொழியில் ஆட்சி செலுத்தவும், அவை ஏனை மாநிலங்களோடும் நடுவணரசோடும் தொடர்பு கொள்ளல், நடுவணரசு மாநிலங்களோடும் அயல்நாடுகளோடும் தொடர்பு கொள்ளல் முதலியவற்றுக்கு இணைப்புமொழியாக ஆங்கிலத்தைக் கொள்ளவும் வாய்ப்பிருக்க, இஃது இத் துணைக் கண்டத்தினர் அனைவர்க்கும் சமநிலையளிக்கும் நன்முறையாகவும் இருக்க, நடுவணரசைக் கைப்பற்றும் வாய்ப்புத் தமக்குமட்டுமே இருக்கின்ற நிலையைப் பயன்படுத்திக்கொண்டு, நடுவுநிலை பிறழ்ந்து இந்தியாளர் தமது மொழி ஒன்றனையே ஆட்சி மொழியாக்குவேம் என்று மடிதற்று நின்று இந்திய ஒற்றுமையைச் சிதைக்க முனை கின்றனர்.

இந் நாவலந்தேயத்தில் தனித்தனி நாடுகளாய் இருந்தன வற்றை ஒருங்கிணைத்து இந்தியா என ஒருநாடாக உருவாக்கி அரசாட்சி செலுத்திய ஆங்கிலேயர்கள் ஆங்கிலத்தினுலேயே செம்மையாக ஆட்சிசெலுத்த முடிந்தது. இந்தியாவை உருவாக்கிய ஆங்கிலமே அதனை இதுகாறும் இணைத்துக் காத்துக்கொண்டிருக்கின்றது. அதுவேயுமன்றி ஆங்கிலம் இந்திய மொழிகளில் ஒன்ருக வேருன்றியுள்ளது. இந்தியாவெங்கணும் பரவலான வழக்காக நிலைபெற்றுள்ளது. ஆங்கிலத்தையே தாய்மொழியாகக் கொண்டவர்கள் கணிசமான அளவினர் இந்தியக் குடிமக்களாக உரிமைபெற்று வாழ்ந்து வருகின்றனர். இத்துணையையும் புறக்கணித்து ஆங்கிலம் அயன்மொழி யென்றும், இந்தியே இந்தியாவின் உரிமை மொழி யென்றும், இந்திய ஒருமைப்பாட்டுக்கு அது கட்டாயத் தேவை யென்றும் போலிக்காரணங்காட்டி இந்தியாவிலுள்ள

இந்திக்காரர்களாகிய சிறுபான்மையினர் இந்தியாரல்லாத பெரும்பான்மையினரை அடிமைப்படுத்தி வல்லாட்சி செலுத்த முனைந்திருப்பது மேற்கூறியாங்கு அவர்கள் ஒருமைப்பாடு ஒருமைப்பாடு என்று ஓவாது கூக்குரலிடும் இந்திய ஒற்றுமைக்கே ஊறுவிளைப்பது உறுதி.

இந்தி பேசாதார்மாட்டு இந்தியைத் திணிக்கக்கூடாது எனின், இந்திக்காரர்கள் ''எங்கள்மீது ஆங்கிலத்தைத் திணிக்கக் கூடாது'' என்கின்றனர். முந்நூருண்டுகட்கு முன்னர் இங்கு வந்து ஏறத்தாழ நூற்றைம்பது ஆண்டுகளாக இத் துணைக்கண்டத்தின் ஆட்சிமொழியாக விளங்கி வருவதும், மேற்கூறியாங்கு பல்வேறு இனத்தவரையும் இதுகாறும் இணைத்துக் கொண்டுள்ளதுமான ஆங்கிலத்தைக் கைவிட்டு அவ்விடத்தில் இந்தியைத் திணிக்கக் கூடாது என்பதன் உண்மையை உணராமலோ அல்லது உணர மறுத்தோ கூறும் கூற்றே அஃது என்பதைச் சிறுமகாரும் அறிவர்.

இந்தியாவின் தலைமைப் பொறுப்பில் உள்ளோர் யாவராயினும், அவர்தமக்குள் எத்தனை முரண்பாடான கொள்கைகளும் செயன்முறைகளும் இருப்பினும், இவ் இந்திக்கொள்கையில் மட்டும் முற்றும் ஒன்றுபட்ட கருத்தும் செயல் முறையும் உடையவராகவே இருக்கின்றனர். இஃது அன்றுமுதல் இன்றுகாறும் வாடிக்கையாக வளர்ந்து கொண்டிருக்கின்றது.

முறையாக மக்களால் தேர்ந்தெடுக்கப் பெருதவர்களைக் கொண்டு பணியமர்த்தமாக அமைக்கப்பட்ட குழுவினரே இந்தியை இத் துணைக்கண்டத்தின் பொது ஆட்சிமொழியாக்கும் சட்டத்தை உருவாக்கினர் என்பதும், அதுவும் இந்திக்குச் சார்பாகவும், எதிர்ப்பாகவும் சமமான ஒப்போலைகள் (Votes) கிடைத்த நிலையில் குடியரசுத் தலைவர் தம் அதிகாரத்தைப் பயன்படுத்தி இந்திக்குச் சார்பாக அளித்த ஒரே ஓர் ஒப்போலையினாலேயே இந்தி இந்தியாவின் பொது ஆட்சிமொழியாக அறிவிக்கப்பட்டது. ஆகவே தொடர்ந்த பெருஞ் சிக்கலுக்குள்ளாகியிருக்கும் இவ் ஆட்சிமொழிக் கோட்பாட்டை மறு ஆய்வு செய்வது மிகவும் இன்றியமையாததாகும் என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகின்றோம்.

ஏறத்தாழக் கடந்த அரைநூற்றுண்டுக் காலமாகத் தமிழ்நாட்டில் இந்தித் திணிப்பு எதிர்ப்பு முயற்சிகள் பெருந்தொடராக நீண்டுகொண்டிருக்கின்றன. 1938 ஆம் ஆண்டில் இந்தி

கட்டாய பாடமாக்கப்பட்டதை எதிர்த்துத் தமிழர்கள் கிளர்ந்தெழுந்தனர். நிறைபுல வேந்தர் மறைமலையடிகளார் அவர்கள் தலைமையில் தமிழ்நாட்டின் அனைத்துக் கட்சித் தலைவர்களும், பல்துறைப் பெருமக்களும், அணிவகுத்து நின்றனர். இந்தி ஒருவாறு பின்வாங்கியது. (1928 ஆம் ஆண்டளவில் இம் முயற்சி கருத்தளவில் பேசப்பட்டபோதே தமிழ்நாட்டில் எதிர்ப்புக்குரல் எழுந்தது.)

அடுத்து 1948 ஆம் ஆண்டில் தமிழ்நாட்டில் இந்தி பரவலாகத் திணிக்கப்பட்டுவருதலை எதிர்த்துத் தந்தை பெரியார் ஈ. வே. இராமசாமி அவர்கள் தலைமையில் பெரும் போராட்டம் நடைபெற்றது. இந்தித்திணிப்பின் முடுக்கம் சற்றுக் குறைந்தது.

இனி 1962 ஆம் ஆண்டு மீண்டும் இந்திப்படை தமிழ் நாட்டில் நுழைந்தது. தமிழ்நாட்டில் குழப்பமும், கலவரமும் எழுந்தன. அப்பொழுது தலைமையமைச்சராய் விளங்கிய பண்டிதர் சவகர்லால் அவர்கள் "இந்தி பேசாதவர்கள் விரும்புகிறவரை ஆங்கிலமும் இந்தியாவின் துணை ஆட்சி மொழியாக நீடிக்கும்" என்று ஒரு போலி உறுதி மொழியளித்து ஒருவாறு நிலைமையைச் சரிப்படுத்தினர்.

பண்டிதர் சவகர்லால் அவர்களின் மறைவுக்குப்பின் 1965 ஆம் ஆண்டில் இந்தி இத் துணைக்கண்டத்தின் ஆட்சிமொழியாக மும்மொழித் திட்டம் நடைமுறைப்படுத்தப்பட முனைந்தபோது தமிழ்நாடு கொந்தளித்தெழுந்தது; கொடும்போர் நிகழ்ந்தது. 1938ஆம் ஆண்டு இந்தியைத் திணித்த உயர்திரு சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் அவர்களே இந்தித் திணிப்பின் தீமையை யுணர்ந்து தம் கருத்தை மாற்றிக் கொண்டு இந்தித் திணிப்பை எதிர்த்துப் பெருங்குரல் எழுப்பினர். நடுவணரசு அமைச்சர்களாக விளங்கிய திருவாளர்கள் சி. சுப்பிரமணியம், ஓ. வி. அளகேசன் ஆகிய இருவரும் இந்தித் திணிப்பால் தமிழ் நாட்டில் நிகழ்ந்த கொடுஞ்செயல்களைப் பொறுக்கமாட்டாது தம் அமைச்சுப் பதவிகளினின்றும் விலகினர். தமிழ்நாட்டைப் பின்பற்றி வங்காளம், கேரளம், ஆந்திரம், கன்னடம் ஆகிய மாநிலத்தவரும் இந்தித் திணிப்பை எதிர்த்துக் கிளர்ச்சி நடத்தினர். இந்தி வெள்ளம் ஒருவாறு தணிந்தது.

1967 ஆம் ஆண்டில் தமிழ்நாட்டு ஆட்சியைக் கைப்பற்றிய பேரறிஞர் அண்ணாத்துரை யவர்களின் தலைமையிலமைந்த தி. மு. கழக அரசு 1968 இல் தமிழ்நாட்டில் தமிழும் ஆங்கிலமும் என்னும் இருமொழித்திட்டத்தைச் சட்டப் பேரவையில் நிறைவேற்றி மும்மொழித் திட்டத்திற்கு முற்றுப்புள்ளி வைத்தது.

இத் தொடர்நிகழ்ச்சியில் கொடுஞ்சிறையில் அடைக்கப் பெற்றுத் துன்புற்றவர் பலர்; பதவி பறிக்கப்பெற்றும் வருவாய் இழந்தும் வாடியவர் பலர்; காவலர்களால் சுட்டுக் கொல்லப்பட்டவர் பலர்; உலகவரலாறு காணாத அளவிற்குத் தாய் மொழி காக்க முனைந்து தம் உடலுக்குத் தாமே தீ மூட்டிக் கொண்டு உயிர் நீத்தவர்களும் பலர்.

இத்துணைக்குப் பின்னும் இந்திய நடுவணரசினர் 'இந்தியை நாங்கள் திணிக்கவில்லை, திணிக்கவில்லை' என்று கூறிக்கொண்டே தம் நேரடி ஆளுமையின் கீழுள்ள துறைகளில் இந்தியை வலிந்து புகுத்தி வருகின்றனர். ஆங்கிலம் துணை ஆட்சி மொழியாக நீடிக்கும் என்பது கூடப் பெயரளவில் இருந்தாலும் அது கடைப்பிடிக்கப்படவில்லை; புறக்கணிக்கப்படுகின்றது. சுற்றறிக்கைகள் கடிதங்களெல்லாம் இந்தியில் மட்டுமே அனுப்பப் படுகின்றன. பணவிடைத்தாள்கள் முதலிய படிவங்களெல்லாம் இந்தியில் மட்டுமே அச்சிட்டுப் பரப்பப் படுகின்றன. இதற்கு எதிர்ப்புக்குரல் எழவே இந்தியிலும் ஆங்கிலத்திலும் மேலும் கீழுமாக அச்சிட்டுப் பரப்புகின்றனர். பெருவாரியான மக்களின் தாய்மொழிகளாக விளங்கும் மற்றை மொழிகளெல்லாம் முற்றும் புறக்கணிக்கப்படுகின்றன. இந்தியோ ஆங்கிலமோ அறியாத பிறமொழியாளர்கள் தம் மனநிலை என்னும்? இந்தியின்கீழ் ஆங்கிலத்தை ஒட்டியிருப்பது எதிர்ப்பைச் சரிப்படுத்த இப் போதைக்குச் செய்யப்படும் கண்துடைப்பே யன்றி வேறில்லை; நாளடைவில் ஆங்கிலத்தைக் கைவிட்டு இந்தியை மட்டுமே நிலைப்படுத்தும் கரவுள்ளத்துடன் செய்யப்படுவதே என்பது தெளிவு.

அஞ்சல்துறை, தொடர் வண்டித்துறை, நாட்டுடைமை வைப்பகங்கள் முதலிய பற்பல துறைகளிலும் இந்தியின் தனி யாளுமை வலுப்படுத்தப்பட்டு வருகின்றது. இந்தியைப் பயின்றுள்ளவர்கட்கு மட்டுமே வேலை வாய்ப்பு என்னும் நிலை உருவாகியுள்ளது. முன்னமேயே அலுவல் பார்த்துக் கொண்டிருப்பவர்கள்கூடப், பகுதி நேர இந்தி வகுப்புகளில் சேர்ந்து இந்தி பயிலுமாறு கட்டாயப்படுத்தப் பெறுகின்றனர். இந்தி பயின்றால் மட்டுமே தம் அலுவலைக் காப்பாற்றிக் கொண்டு தொடர்ந்து நீடிக்கவும், பதவி உயர்வு, சம்பள உயர்வுகள் பெறவும் முடியும் என்று அச்சுறுத்தவும், ஆசை மூட்டவும் பெறுகின்றனர்.

கடந்த பல காலக் கட்டங்களிலும் இந்தியாளர் இன்னோ ரன்ன பலப்பல முயற்சிகளை முனைந்து செய்வதும், எதிர்ப்பு மிகுமாயின் சற்றுப் பின்வாங்கிக் கொள்வதும் தொடர்ந்த வழக்காய் நிகழ்ந்து வருகின்றது. என்றேனும் ஒருநாள் தம் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளவேண்டும் என்பதே இந்தியாளர் பேரரசை.

இந் நிலைகள் எல்லாம் பாராளுமன்றத்தினும் செய்தித் தாள்கள் வாயிலாகவும் சுட்டிக்காட்டப் பட்டுள்ளன. எனினும் நடுவணரசு இதில் அக்கறைகாட்டியதாகத் தெரியவில்லை. சென்னையில் கடந்த 15 - 8 - 78 அன்று மாபெரும் இந்தி யெதிர்ப்பு மாநாடொன்று செட்டிநாட்டரசர் அரசவயவர் முத்தையாசெட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றுள்ளது. இம் மாநாட்டில் தமிழ்நாட்டின் அனைத்துக் கட்சித் தலைவர்கள் மற்றும் மொழியறிஞர்கள் கலந்துகொண்டு இந்தித் திணிப்புக்குக் கண்டனம் தெரிவித்துள்ளனர். தொடர்ந்து போராடவிருப்பதாக அறிவித்துள்ளனர்.

தமிழ்நாட்டவர் மட்டுமே இந்தியை எதிர்க்கின்றனர் என்று சிலர் தவருக எண்ணுகின்றனர். மேற்கூறியாங்குக் கடந்த 1965 ஆம் ஆண்டுப் போராட்டத்தின் போதே வங்காளம், கன்னடம், கேரளம், ஆந்திரம் ஆகிய மாநிலத்தவர்களும் இந்தித் திணிப்பின் தீமையை உணரத் தொடங்கிவிட்டனர். ஆட்சிப் பொறுப்பில் உள்ளோர் எத்துணைதான் மூடி மறைப்பினும் மக்கள் உணர்வு வெடித்து வெளிப்படுவது திண்ணம். இனிப் பஞ்சாபு, மராட்டியம் முதலிய மாநிலத்தவர்களும் இந்தியை ஏற்றுக் கொள்வதனுல் தாம் இரண்டாந்தரக் குடிமக்களாக்கப் படுதலை நடைமுறையில் கண்டுகொண்டு எதிர்காலத்தில் எதிர்க்கவே செய்வர்.

இந்திய நடுவணரசினர் மேற்கூறிய நிலைகளைத் தீர விளங்க எண்ணிப் பார்த்து இத் துணைக்கண்டத்தின் எதிர்காலம் ஒற்றுமை என்னும் ஒளிமயமானதாக அமையும் பொருட்டு இந்தித் திணிப்பைக் கைவிடுமாறு வேண்டி அறிவுறுத்துகின்றோம்.

# தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

12. மகன் (இளமைக் கருத்தை அடிப்படையாகக் கொண்ட சொல்)

உல்—முல்—மெல்—மென்மை. இந். முலாயம் = மெல்லிய. பிறப்பு அல்லது தோற்றக் கருத்தினின்று, முன்வரல், முன்மை, இளமை, சிறுமை, மென்மை, அழகு முதலிய கருத்துக்கள் கிளைக்கும்.

மெல்—*E. mellon*, soft, *L. mollis*, soft, *E. mollify*, to make soft.

மெல்லுதல் = கடினமான வுணவைப் பல்லால் அரைத்து மெலிதாக்குதல்.

ஒ. நோ: *L. mol*, to grind, to make soft by grinding. *L. mola*, *E mill*, building with machinery for grinding corn.

*E. molar*, f. *L. molaris*, mammal's back teeth serving to grind.

*E. muller*, tool used for grinding powders on slab, upper part of the millstone, f. *ME. mulour* f. *mul*, to grind. *L. mola*, millstone.

மெல்—மெலி—மெலிவு.

மெல்—மெல்கு. மெல்குதல் = மெலிதாதல்

மெல்—மெலு—மெலுக்கு = மென்மை.

மெல்—மெது—வ. ம்ருது, *E.* smooth, *OE. smoth, smethe, smeeth*. க. மெது.

மெது—மெத்து. மெத்தெனல் = மெதுவாயிருத்தல்.

மெத்தெனவு = மென்மையான சொல், குணம், ஊறு, பொருள். "வெட்டெனவு மெத்தெனவை வெல்லாவாம்" (மூதுரை, 33).

மெத்து—மெத்தை = மெதுவான இருக்கை, படுக்கை, தலையணை.

மெலுக்கு — மெதுக்கு. மெதுக்கிடுதல் = மென்மையாதல், மென்மையா யிருத்தல்.

மெது—மெதுவு—மெதுகு. மெது—மெதுப்பு.

மெல்—மெல்ல = மெதுவாக. மெல்ல—மெள்ள = பைய.

மெல்—மெல்லம்—மெள்ளம்.

முல்—முன்—முன்னி = காட்டில் இயற்கையாக விளையும் சிறு பயற்றுவகை.

முன்—முனி = யானைக்கன்று. "முனியுடைக் கவளம் போல" (கலித். 360).

முன்—மின்—L. *min*, small.

இவ் வேர்ச்சொல்லினின்று பின்வருமாறு பல சொற்கள் திரிந்துள்ளன.

mince (to cut small), miniature, minicab, minify, minim, minimal, minimalise, minimum, minion, minish (diminish), minister (servant, one who is small), ministerial, ministration, ministrant, ministrative, ministry, minimize, minor, monority, minus, minuscule, minute, minutia.

முன்—முனகு—முனங்கு. முனகுதல் (முனங்குதல்) = மெதுவாக வாய்க்குட் சொல்லுதல், முணு முணுத்தல்.

ஒ - நோ : *ME., E. moan*, to make low murmur.

முல்—முள்—முளு.

முளுதல் = அரிசி வெந்து முண்டி வருதல். சோறு முளுந்து வருகிறது.

முள்—முளை. முளைதல் = முளைத்தல். விதை இன்னும் முளைய வில்லை. (உ. வ.)

முளைத்தல் = 1. தோன்றுதல். "ஒன்றாய் முளைத்தெழுந்து" (திருவாச. 10 : 8). 2. எழுதல். "காலை ஞாயிறு கதிர் விரித்து முளைப்ப" (மணி. 8 : 18).

ம. முளை. க. மொளெ, தெ. மொலத்சு.

முளையன் = சிறுவன். முளையான் = சிறு குழந்தை, இந்த முளையான் பேச்சை யார் கேட்கிறது? (W).

முளை = 1. வித்தினின்று வெளிப்படுவது. "வித்திய வெண் முளை" (ஐங்குறு. 29). 2. இளமை. "முளையமை திங்கள்" (கம்பரா. கும்பக. 16). 3. மரக்கன்று. "அதன்ருள் வழியே முளை யோங்குபு" (சீவக. 223). 4. முளையான். 5. மகன் (பிங்.). 6. மூங்கில் முளை. 7. புண்முளை. 8. மூலமுளை. 9. திரிகை முளை. 10. கதவுக்குடுமி. 11. குறுந்தறி.

ம. முள, து. முளெ, க. மொளெ, தெ. மொலக்க.

முள்—முர்—முரு—முருகு = 1. இளமை (திவா). 2. அழகு (பிங்.). 3. எழுச்சி (திவா.). 4. முருகன். "அருங்கடி வேலன் முருகொடு வளைஇ" (மதுரைக் - 611). 5. தெய்வம். "முருகு மெய்ப்பட்ட புலைத்தி போல" (புறநா. 259). 6. வேலன் வெறி யாட்டு. "முருகயர்ந்து வந்த முதுவாய் வேலன்" (குறுந். 362). 7. திருவிழா. "முருகயர் பாணியும்" (சூளா. நாட். 7). 8. திரு முருகாற்றுப் படை. "முருகு பொருநாறு" (தனிப்பா.).

முருகு—முருகன். ம. முருகன், க. முருக (g.).

முரு—முறு—முறி. முறிதல் = துளிர்த்தல். "முறிந்த கோல முகிழ் முலையார்" (சீவக. 2358).

முறி = 1. தளிர். "முறிமேனி" (குறள். 1113). 2. கொழுந் திலை. "இலையே முறியே தளிரே தோடே" (தொல். மர. 88).

முள்—முண்டு. முண்டுதல் = வித்தின் முளை முளுத்தல் அல்லது முட்டுதல்.

முள்—முட்டு = இளம் பிஞ்சு. முட்டுக்காய் = முற்ருத இள நீர்.

முட்டுக் குரும்பை = சிறு குரும்பை.

முட்டு—மொட்டு = 1. அரும்பு. "மொட்டரு மலர்" (திருவாச 29 : 8). 2. தேரின் கூம்பு. "மாமொட் டொடிந்து......மான் றேர் சிதைய" (பாரத. நான்கா நாள். 24).

மொட்டு—மொட்டை. மொட்டைப் பயல் = மணமாகாத இளைஞன், இளவட்டம். (பொதுவாக இழிவுக் குறிப்பு).

முள்—முண்—முண. முணமுணத்தல் = மெதுவாக வாய்க்குட் பேசுதல்.

முண்—முணு. முணு முணுத்தல்=மெதுவாக வாய்க்குட் பேசுதல்.

முணு—முணுக்கு. முணுக்கு முணுக்கெனல்=சிறு குழவி சிறிது சிறிதாகத் தாய்ப்பாலுண்ணுதல்.

முணமுண—மொண மொண. மொண மொண வெனல்= வாய்க்குட் சொல்லுதல். "சுற்றிவந்து மொண மொணென்று சொல்லு மந்திரம் ஏதடா" (சிவவாக். பா.)

முணுக்கு—முடுக்கு=1. சிற்றளவான குடிநீர். 2. சிறு தெருச் சந்து.

முடுக்கு—முடுக்கர்=குறுந்தெரு. "முடுக்கரும் வீதியும்" (சிலப். 5 : 182).

முடுக்கு—விடுக்கு=சிற்றளவான குடிநீர்.

முண்—மண்—மணி=சிறியது. மணிக்கயிறு, மணிக் காக்கை, மணிக்காடை. மணிக்குடல், மணிக்கை, மணிப்புரு முதலிய கூட்டுச் சொற்களை நோக்குக. மண்—மண்ணை=இளமை (பிங்.).

மணி—மாணி=1. சிறியது. 2. மாணவன், பள்ளிப்பிள்ளை. 3. மணமாகாதவன். 4. குறளன். "கருமாணியா யிரந்த கள்வனே" (திவ். இயற். 2 : 61), "மாணிக் குறளுரு வாய மாயன்" (திவ். பெரியாழ். 5 : 2 : 5).

மாணி—மாணவன்—வ. மாணவ.

மாணவன்—வ. மாணவக—த. மாணுக்கன்.

முள்—முழு—முகு. ஒ. நோ : தொள்—தொழு—தொகு.

முகு—முகுள்—முகுளம்=1. அரும்பு. "பங்கய முகுளந் தன்னைக் கொங்கையாப் படைத்த" (திருவாலவா. 4 : 14). 2. ஐந்து விரலுந் தம்மில் தலைகுவிந்து உயர்ந்து நிற்கும் இணையா விணைக்கை வகை. (சிலப். 3 : 18, உரை). 3. (ஓகம்) இருகாலும் ஒக்கவைத்து மண்டலமாக இருக்கும் இருக்கை வகை. (தத்துவப். 109, உரை). 4. மூளையின் பின் பகுதியான முள்ளந் தண்டுக் கொடியின் குவடு (சிகரம்), (இங். வை. பக். 27).

முகுளம்—வ. முகுல.

முகுள்—முகுளி. முகுளித்தல்—குவிதல். முகுளிக்கும்...... அரவிந்த நூருயிரம் (தண்டி. 62).

முகுள்—முகுளம்—முகுடம் = முடிக்கலம். முகுடமும் பெருஞ் சேனையும் (பாரத. குரு. 14). 2. முடியுறுப்பு ஐந்தனுள் ஒன்று (திவா.).

முகுட—வ. முகுட்ட.

முகுளம்—முகுரம் = தளிர். (சங். அக.).

முகுரம்—வ. முகுர.

முகுடம்—மகுடம் = 1. மணிமுடி. "அரக்கன்றன் மகுடம்" (கம்பரா. முதற்போ. 246). 2. தலைப்பாகை வகை. 3. கோவில் தேரின் கும்பம். 4. ஓலைச் சுவடியின் மணிமுடிச்சுக் கொண்டை. 5. மாதர் காதணி வகை. 6. மத்தளம் முதலியவற்றின் விளிம்பு. 7. பறை வகை. 8. பதிகம், பதின் பதிகம் (சதகம்) முதலிய வற்றின் பாட்டுத் தோறும் ஈற்றில் வரும் பொதுச் சொற்றொடர். 9. கட்டுரைத் தலைப்பு.

மகுடம்—வ. மக்குட்ட.

பேரா. பரோவும் (Burrow) மகுடம் என்பது தென்சொல் லென்று குறித்திருத்தல் காண்க.

முகிள்—முகிழ். முகிழ்த்தல் = 1. அரும்புதல் "அருமணி முகிழ்த்தவேபோ லிளங்கதிர் முலையும்......பரந்த" (சீவக. 551). 2. தோன்றுதல். "மூவகை யுலகு முகிழ்த்தன முறையே" (ஐங் குறு. கடவுள்). 3. குவிதல். "மகவுகண் முகிழ்ப்ப" (கல்லா. 7)—செ. குன்றுவி. 1. ஈனுதல். "அமரராதியரை முகிழ்த்து" (விநாயகபு. 81 : 154). 2. தோற்றுவித்தல். "அற்புத முகிழ்த் தார்" (காஞ்சிப்பு. பன்னிரு. 163).

முகிழ்தல் = குவிதல். "முகிழ்ந்து வீங்கிள முலை" (சீவக. 1004).

முகிழ் = 1. அரும்பு. "குறுமுகிழ வாயினுங் கள்ளிமேற் கைந் நீட்டார்" (நாலடி. 262). 2. பூவின் காம்படி. 3. மொக்குள். "பெயறுளி முகிழென" (கலித். 56). 4. தேங்காய் மடல். 5. தயிர் முதலியவற்றின் கட்டி. 6. ஐந்து விரலுந் தம்மில் தலைகுவிந்து உயர்ந்து நிற்கும் இணையா விணைக்கை வகை. (W.).

முகிழ்—முகிழம் = பேரரும்பு. (சது.).

முகிழ்—முகிழி. முகிழித்தல் = குவிதல்.

முகு—முகை. முகைதல் = அரும்புதல். "பொய்கை முகைந்த தாமரை" (ஐங்குறு. 6).

முகைத்தல் = அரும்புதல். முகை = அரும்பு. "முகை மொக்கு ளுள்ளது நாற்றம்போல்" (குறள். 1274).

முகு—முகம் = 1. தலையின் முன்புறம். "முகத்தா னமர்ந் தினிது நோக்கி" (குறள். 93). 2. தோற்றம். "களிமுகக் களி றன்னான்" (சீவக. 298). 3. முன்பு. "ஈன்ருள் முகத்தேயு மின்னாதால்" (குறள். 923). 4. நோக்கு. "புகுமுகம் புரிதல்" (தொல். மெய்ப். 13). 5. தொடக்கம். (W.). 6. நாடகச் சந்தி ஐந்தனுள் முதலது. (சிலப். 3 : 13, உரை). 7. நடிகர் அரங்கத் திற்கு வருமுன் நிகழுங் கூத்து. (சிலப். 3 : 147, உரை). 8. கட்டியின் முனை. 9. நுனி. "அயின் முகக்கணை" (கம்பரா. ஆற்றுப். 14). 10. முகமன். "முகம்பல பேசி யறியேன்" (தேவா. 742 : 2). 11. ஊழ்கம் (தியானம்) "செல்வன்......இரண்டுருவ மோதி நேர்முக நோக்கி னனே" (சீவக. 1289). 12. முதன்மை. (W). 13. மூலம். 14. வாய். "மொழிகின்ற முகத்தான்" (கம்பரா. மாலிவ. 74). 15. வாயில் (சங். அக). 16. கழி. (பிங்). 17. மேலிடம். (W). 18. இடம். (திருக்கோ. 356, உரை). 19. வடிவம். 20. காரணம். 21. ஏழாம் வேற்றுமை யுருபு. "இனிய செய்திநின் னார்வலர் முகத்தே" (புறநா. 12).

முகம்—வ. முக (mukha).

முகஞ்செய்தல் = (செ. கு. வி.). 1. தோன்றுதல். "முகஞ் செய்காரிகை" (பெருங். உஞ்சைக். 35 : 49). 2. முன்னுதல். "தோற்றினான் முகஞ்செய் கோலம்" (சீவக. 6275.)—(செ. குன்று வி.) "முன்னினான் வடதிசை முகஞ்செய்து" (சீவக. 1408).

முகம் என்பது, நிலைச் சொல்லாகவும் வருஞ் சொல்லாகவும் எத்துணையோ கூட்டுச் சொற்களில் தொன்று தொட்டு வழங்கி வருகின்றது.

எ - டு : முகவுரை, முகக்களை, முகச்சாடை, முகதலை, முக நட்பு, முகப்பழக்கம், முகமண்டபம், முகவாய்க் கட்டை.

அறிமுகம், கழிமுகம், சுரிமுகம், திருமுகம், துறைமுகம், நான் முகம், போர்முகம், மறைமுகம், முனைமுகம்.

(தொடரும்)

## எல்லோர்க்கும் வாய்ப்பதொன்றன்று

ஒரு நூலை இயற்றுங்கால் அந்நூல் எல்லோர்க்கும் உறுதி பயக்கத்தக்க வகையிலும், பயன்றரத்தக்க வகையிலும் எல்லோரை யும் புனிதப்படுத்தத்தக்க வகையிலும் அதனை இயற்றி முடித்தல் என்பது எல்லோர்க்கும் வாய்ப்பதொன்றன்று.

**மறைமலையடிகள்**

*—மறைமலையடிகள் அறிவுரைக் கோவை - பக். 81*

# இயற்கை ஓவியம்—'மயிலாட்டம்'

[இரா. இளங்குமரன்]

மயில் அழகான பறவை; அதன் அழகு அதனை இந்திய நாட்டின் 'தேசியப்பறவை' ஆக்கியது.

மயிலின் ஆட்டம் கவர்ச்சிமிக்கது. அவ்வாட்டமே கூத்துக் கலைக்கு வித்து ஆகியது; கூத்து முத்தமிழில் ஒன்றாகி முறை சிறந்தது.

மயிலின் ஆட்டத்திற்கு வயப்பட்ட மக்கள் அதனைப் போலவும் ஆட விரும்பினர். அது 'மயிலாட்டம்' ஆகியது. 'ஆட்டம்' என்னும் சொல்லும் 'போல' என்னும் ஒப்புப் பொருளும் தருவது ஆயிற்று. 'அவனாட்டம் நடக்கிறான்' 'அவனாட்டம் பேசுகிறான்' என்பது வழக்கு.

மயில் அழகாக ஆடிமகிழ்ந்த இடம் அதன் பெயரால் வழங்கப் படுவதாயிற்று. மயிலாடுந்துறை, மயிலாடும் பாறை, மயிலம், மயிலாப்பூர் என்பவை அவை.

மயிலின் ஆட்டக் கவர்ச்சி மக்களை அன்றி மற்றை உயிர் களையும் ஆடச் செய்தது. 'கான மயிலாடக் கண்டிருந்த வான் கோழி' ஆடுவதை ஔவையார் கூறினார். 'மந்தி குதித்தாடும் மயிலாடு துறையை' ஞானசம்பந்தர் பாடினார். 'மயிலாடும் அரங்கில் மந்தி நோக்குவதை'ச் சாத்தனார் சாற்றினார். மயிலாடும் பாறையின் பக்கலில் மந்திச் சுனையைக் கண்டு ஊர்களாக்கி உவந்தனர் மதுரை மாவட்டத்துக் கடமலைக்குண்டு வட்டாரத் தினர்.

மயிலின் எழில் அதனைத் தெய்வத் திருவூர்தியாக்கி முருகனை மயிலேறும் மாணிக்கமாக்கிக் கோடி கோடி அடியார் களைத் தேடித் தேடி வணங்க வைத்தது. 'வேலும் மயிலும் துணை" என்று அடைக்கலமாகவும் ஏவியது.

மயிலின் குஞ்சுகளுள் தலைக்குஞ்சே தனிப் பேரழகினது என்றும், தலைமைக் குரியது என்றும் கூறுவர். ஆதலால் மூத்தவர்க்கு அரசுரிமை யுடைய முடிமன்னர் குலம் 'மயின்மூறைக் குலம்' எனப் பெற்றது. அக்குலத்து வந்தவன் கேகயன்

ஆனான்; அவன் மகள் கைகேயி ஆனாள் (கேகயம்—மயில்)! 'மயின் முறைக் குலத்துரிமையை மாற்றாதே' என்று தயரதன் அவளிடம் மண்டியிட்டுக் கிடந்தது இராமகாதைச் செய்தி.

நீலக் கடல்மேல் செங்கதிர் எழுவதைக் கண்டு களித்த புலவர் நக்கீரனார், கோலமயில்மேல் ஏறிவரும் குமரனைக் கொண்ட காட்சி முருகாற்றுப் படையின் முதற்படைப்பு.

மயில் உடுத்துமா? போர்த்துமா? அது மழைமேகங் கண்டு ஆடுவதைக் கண்டு, குளிர்க்கு நடுங்குவதாகக் கருதி மனம் நடுங்கினான் மன்னன் பேகன்! தான் நடுங்கிக் கொண்டே மயில் நடுக்கம் தீர்ப்பதற்காகத் தன் போர்வையை வழங்கினான். அவனுக்குத் தமிழ் இலக்கியத்தில் அழியா வாழ்வளித்தது மயில்!

மயில் ஆட்டத்தில் மனம் பறிகொடுத்த பாவலர் பலர்; அவர்கள் தீட்டிய ஓவியங்களும் பல. அவற்றுள் மயிலாட்ட ஓவியம் ஒன்று. அவ்வோவியம் எவ்வாறு தொடங்கியது; வளர்ந்தது; முழுமை பெற்றது?

மாநிலத்தை நானிலமாகப் பகுத்தது தமிழகம்; அவை குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்பன. இவற்றுள் மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சி. இக் குறிஞ்சியைப் பாடுதலில் இணையற்று விளங்கிய பெரும்புலவர் கபிலர். அவரைக் 'குறிஞ்சிக் கபிலர்' என்று பாராட்டி மகிழ்ந்தது தகுதியறிந்து பட்டம் வழங்கும் பண்டைத் தமிழகம். அக் கபிலர் களித்தாடும் மயிலைக் கண்டார்; தம் எண்ணத் திரையில் வண்ண ஓவியமாகத் தீட்டினார். அதனைச் சொல் ஓவியமாக்கித் தமிழ் உலகுக்குப் படைத்தார். அப் படையல் அகநானூற்றின் எண்பத்திரண்டாம் பாடலாய் அணி செய்கின்றது.

ஒரு பெருமலை; அதற்குப் பக்கமலை ஒன்று; அம்மலையில் இருந்து அருவிகள் பொழிகின்றன; விண்ணில் இருந்து மண்ணில் வெள்ளியுருக்கு வீழ்வது போல வீழ்கின்றன. மெல்லிய வெண்பஞ்சுத் துய்யைத் தூவிவிட்டாற் போலத் தூவானம் தவழ்கின்றது. வெண்தூவானம் கருமுகில் கூட்டத்துடன் கலந்து வானப் போர்வையாகி வனப்புச் செய்கின்றது. ஓங்கி உயர்ந்த மூங்கில்கள் அரங்கமாய் அமைந்து அழகு செய்கின்றன. அவ்வரங்கிலே ஆடுகின்றாள் ஒருத்தி; அவள் பெயர் 'மயிலி'

மயிலியாம் ஆடுமகள் தன் திறமையெல்லாம் கூட்டி ஆடுகின்றாள்; உள்ளத்து உணர்ச்சியை யெல்லாம் ஒருங்கு காட்டி

ஆடுகின்றாள். விழாக் கொண்ட பேரூரில் குழுக் கொண்ட மக்கள் அரங்கில், தன் திறமெல்லாம் காட்டி ஆடும் விறலி போல ஆடுகின்றாள்!

ஆட்டம் மட்டும் கூத்தாகி விடுமா? சோறு மட்டும் விருந்தாகி விடுமா? ஆட்டத்திற்குப் பாட்டு வேண்டுமே! பின்னணி இசை வேண்டுமே! பார்வையாளர் வேண்டுமே!

'கழை'யாகிய மூங்கிலிலே 'துளை'களைப் போட்டுள்ளன வண்டுகள். 'துளை'போட்டது, 'பிழை'யோ சரியோ? ஆனால் அத்துளைகள் 'கலை'ப்பொருளாகிவிட்டன. மோதியடிக்கும் மேல் காற்று அம் மூங்கில் துளைகளில் புகுந்து முட்டி வெளிப்படு கின்றது! வறிதே மீளுகின்றதா அக் காற்று? குழலிசையாகிக் கொஞ்சி வெளிப்படுகின்றது. கோடைக் காற்றாகிய குழலோன் 'புல்லாங்குழல்' இசைப்பது முறைமைதானே! ஊதுவோனாகிய ஏவலாள் இல்லாமல், தானே ஊத வந்துள்ளான் காற்றாம் குழலோன் என்றால், மயிலாட்டம் அவனுக்கும் அவ்வளவு மைய லூட்டி விட்டது என்று நாம் மகிழலாம்! இஃது இயற்கை வழங்கிய இனிய **துளைக்கருவி!**

மலைப் பாறைகளின் வழியே ஒழுகி வருகின்றது ஆறு; உயரத்தில் இருந்து பரவிய பாறையில் குதித்து வீழ்கின்றது அருவி! ஒன்றா இரண்டா? பல அருவிகள்! முழங்கி வீழ்ந்து, 'கழங்காடும்' அருவிகள்! மயிலின் ஆட்டத்திற்கு அவ்வருவிகள் முழவுகள் (மத்தளங்கள்) முழக்குகின்றன. இஃது இயற்கை வழங்கிய எழில் மிக்க **தோற்கருவி!**

மலைச்சாரல், மான்களுக்கு விருப்பான இடம்! அருவிச் சூழல், அதற்கு நீரும் தளிர்ப்புல்லும் நிழலும் தந்து இன்பம் பெருக்கும் நேயமிக்க இடம். அவ்விடத்தில் மான்கள் கூட்டத் திற்குக் குறைவு உண்டா? கூடிவிட்டால் அவற்றின் 'பயிர்ப்பு' ஒலிக்குப் பஞ்சம் உண்டா? அவை சேர்ந்து ஒலிக்கின்றன. வங்கியம் (தூம்பு, கொம்பு) என்னும் இசைக்கருவியை மீட்டினாற் போல ஒலிக்கின்றன. இஃது இயற்கை அருளிய இணையற்ற **கஞ்சக்கருவி (உலோகக்கருவி).**

துளைக்கருவி தோற்கருவி கஞ்சக் கருவி என்பவை தாமோ இசைக்கருவிகள்! நரம்புக் கருவி ஒன்றில்லையோ? உண்டு! நலம் பெற உண்டு.

பூத்துக்கிடக்கும் பொதும்பராகவே விளங்கும் அவ்விடத்தில் வண்டுகள் கொள்ளை கொள்ளையாய்ப் பாடித் திரிகின்றனவே!

அவையெல்லாம் என்ன செய்கின்றன? 'யாழ்' மீட்டுகின்றன. இஃது இயற்கை இசைத்த ஈடிலா நரம்புக் கருவி.

குழலிசை, முழவிசை தூம்பிசை, யாழிசை ஆகிய இசைகள் விம்ம மயிலி ஆடுகின்றாள். கூட்டம் இல்லாத ஆட்டம் 'தான் தோன்றி' ஆட்டம் ஆகாதா? பொலிவு மிக்க இந்த ஆட்டத்தைப் போய்ப் பார்க்கக் கூட்டம் இல்லை என்றால், மயிலி ஆட்டத் திறமை இல்லாதவளாக இருக்க வேண்டும். அல்லது, குறிஞ்சி மக்கள் நுகர்ச்சித் திறம் இல்லா 'மரத்தராக' இருக்க வேண்டும்! இரண்டுமே இல்லை! ஆதலால், திரண்ட பார்வையாளர் உண்டு.

பார்வையாளராவோர் மந்தியர்! தம் ஆட்டம் பாட்டம் குறும்பு குதிப்பு எல்லாவற்றையும் அடக்கி ஒடுக்கி முடக்கி வைத்துவிட்டுக் குந்திக்கொண்டு பார்க்கின்றனர். நல்ல 'மந்தியர்'. குறும்புக் குரங்காரும் குந்தியிருந்து கூர்ந்து பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமானால் மயிலியின் ஆட்டச் சிறப்பை விரிக்க வேண்டுமோ? மந்தியார் எப்படி நோக்குகிறாராம்? தம்மை மயங்கி நோக்குகிறாராம்! ஆடல், பாடல், பின்னணி எல்லாம் ஒன்றை ஒன்று விஞ்சி அழகு சேர்ப்பதானால் பார்வையாளர் மயங்கிக் கிடவாமல் என்ன செய்வார்? கபிலர் தீட்டிய ஓவியத்தைக் காண்போமா?

"ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கில்
கோடை அவ்வளி குழலிசை யாக
பாடின் அருவிப் பனிநீர் இன்னிசைத்
தோடமை முழவின் துதைகுர லாகக்
கணக்கலை இகுக்கும் கடுங்குரல் தூம்பொடு
மலைப்பூஞ் சாரல் வண்டியா ழாக
இன்பல் இமிழிசை கேட்டுக் கலிசிறந்து
மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவளர் அடுக்கத்(து) இயலியாடும் மயில்
விழவுக்கள விறலியில் தோன்றும்."

[அமை - மூங்கில்; குயின்ற - துளைத்த, நிறைந்த; அவிர் - விளங்கும் அவ் வளி - அழகிய காற்று; தோடு - தொகுதி; முழவு - மத்தளம் துதை - செறிந்த; கணக்கலை - மான்கூட்டம்; இகுக்கும்-ஒலிக்கும்; தூம்பு - வளைகொம்பு; இமிழ்இசை - இனிய இசை; கலிசிறந்து- மகிழ்ச்சியால் மிகுந்து; மருள்வன - மயங்குவனவாக; கழை - மூங்கில்; அடுக்கம் - பக்கமலை; இயலி - அசைத்து; விறலி - திறமாக ஆடும் மகள்.]

# சிவஞானபோத ஆராய்ச்சி

**[அருட்டிரு அழகரடிகள்]**

(சிலம்பு ௩௨, பரல் ௧௨, ௩௭௩ஆம் பக்கத் தொடர்ச்சி)

'பொறி முதலிய கருவிகளே, மெய்ஞ்ஞானத்தையும் உயிர்க்கு விளக்கலாமே; இதற்கு முதல்வன் எதற்கு? அவன் குருவாய் எழுந்தருளுதலும் வேண்டாம்' என்று நினைப்பவர்களுக்கு இவ் வெண்பா தக்க கருத்துக்களை விளக்குகிறது.

பல நிறங்களைத் தன்னுள் புலப்படுத்தும் படிகத் துண்டு போலப் பொறிகளின் புலன்களே உயிரறிவில் இயங்கும் இயல்பை நினைந்து, யாரும் தெளிவு கொள்ளலாம்.

தெளிவு கொள்ளுவதோடு நின்றுவிடுதல் கூடாது. அத் தெளிவைப் பெற்றதற்கு அடையாளமாகப் பலவகையான உலக அறிவுகளாய் உள்ள நிலையற்ற பொறிபுலன்களை நிலையுள்ள தனக்கு வேறென்று உணர்ந்துகொள்ளவும் வேண்டும். இப்படிச் செய்யாமல் இருந்துவிட்டால் முயற்சி உடைய உயிர்க்கு அது நன்றன்று. நிலையற்ற கருவிகளை நிலையுள்ளனவாக உயிர்கள் எண்ணக்கூடாது.

> **"நில்லாத வற்றை நிலையின என்றுணரும்**
> **புல்லறி வாண்மை கடை"**

என்று தமிழ் மறை கூறும்.

பொய்க் கருவிகளைப் பொய்யாகவே கண்டு சிறப்புண்மையை உணர்ந்த உயிர், தனக்கு வேருக உள்ள மெய்ப்பொருளாகிய தெய்வத்தின் இயல்பையும் தெரிந்து, அதன் இயல்பிற் படியும்; இக் கருத்தும் இச் செய்யுளில் விளங்கும்.

தெய்வம் என்பது தெய்வத்தின் உடைமைகளைக் குறிக்கும். இங்கே தெய்வத்தின் உடைமை என்பது ஞானம்.

இங்கே வேருேர் ஐயம் தோன்றுதலும் கூடும். 'கருவிகளை நீக்கிவிட்டால் அவற்ருல் உண்டாகும் உலக அறிவு விளக்கம், பின்பு உயிருக்குக் கிடைப்பதரிது. அவ்வறிவு கிடைக்காவிட்டால் உயிர் அறியாமையில் இருக்கும். அந் நிலையில் அது தன் உண்மையை அறிவது எப்படி இயலும்?' என்பது.

இந்த ஐயத்துக்கு இடமேயில்லை. கருவிகளால் உயிர்க்கு அறிவு விளக்கம் உண்டாவதை நீக்கவேண்டுவதில்லை. தன்முனைப் பின்றி அந்த அறிவைத் திருத்தொண்டுகளுக்குப் பயன்படுத்த லாம். அது இறைபணியாகவும் இருக்கும். அப்படி உணர்வு விளக்கம் உண்டாகிக் கொண்டிருக்கும்போதே தன்னியல்பையும், உயிர் உணர்ந்துகொள்ளுதல் கூடும். அதற்கு அது தன்முனைப் பாகிய அகப்பற்று நீங்கியிருக்கவேண்டும். இதற்காகவே நான் காம் பிரிவு எழுந்தது. ஞானம் கிடைத்தால் இறைவனியல்பில் உயிர் சேரவேண்டுவதே இயற்கை; சார்ந்ததன் வண்ணமாகித், தான் அயலல்லாமை தெரிந்து, உயிர் திருவடியை அணைந்து கொள்ளும். 'அந்நியமின்மையின் அரன் கழல் செல்லும்' என்று இதனை நூற்பாக் கூறியது.

**நான்காம் பிரிவு :**

மேற்கோளால் இதனை விளக்கும் ஆசிரியர், 'இவ்வான்மா தன்னை இந்திரியத்தின் வேருவான் காணவே தமது முதல் சீபா தத்தை அணையும்' என்று கூறிக்கொண்டார். உயிர் பொறிகள் முதலிய கருவிகளின் வேருகத் தமது சித்துத் தன்மையை வர வரக் கண்டுகொள்ளும். இதற்காகக் கருவிகளை நீக்கிவிட வேண்டாம்; தெளிவதே போதும்; அவற்ருேடு இணக்கம் கூடாது. இதுவரையில் இருந்த இணக்கம் மட்டும் அற்றுவிடும். காண்பது, அவற்ருேடு தொடர்பு கொள்வது, பயன்படுத்துவது மட்டும், செய்து கொண்டு அகத்தில் பற்று மட்டும் அற்று (அவற்ருேடு இணக்கம் கொள்ளாமல்) உயிர் நடந்துகொள்ளுதல் வேண்டும். இதற்காகவே, மேற்கோளில், இந்திரியத்தின் வேருக எண்ணுமல் என்று கூறிவிடாமல், 'வேருவான் காணவே' என்ருர்.

இயற்கையில் அறியாமைப் பொருள்கள் சிறிது அறிவுடைய உயிர்கள், பேரறிவு சான்ற இறைவன், என்று இருப்பது மூன்று பொருள்களே; அறியாமைப் பொருள்களில் பற்றற்ருல் உயிர் அடையவேண்டுவது, பேரறிவுப் பொருளாகிய கடவுளேயன்றி வேறு ஏது? ஊசல் கயிறு அற்ருல் அது தரையில் தானே விழ வேண்டும். இக் காரணத்தையே ஆசிரியர் மேற்கோளுக்கு ஏது வாகக் கூறிக்கொண்டார். 'ஊசல் கயிறு அற்ருல் தாய் தரையே யாம் துணையான்' என்பது அவர் வாய்மொழி. வேறோர் எடுத்துக் காட்டாலும் விளக்கப்படுகின்றது.

*"சிறை செய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்*
*சிறை செய் புலனுணர்வில் தீர்ந்து,—சிறைவிட்*
*டலைகடலிற் சென்றடங்கும் ஆறுபோல் மீளா*
*துலைவிலரன் பாதத்தை உற்று."*

வாழ்க்கையிற் கருவிகளால் உயிரறிவு நீங்கி, அறியாமை நிலையிலிருக்கும்போது மீண்டும் உயிர் அக் கருவிகளில் அறிவு பெறுவதும் உண்டு. இப்படி மீட்சி இருக்கின்றது. கயிறு அற்ற ஊசலும் மீண்டுங் கயிறு பெற்று ஆடுதலுண்டு. அதுபோல அறியாமையுலகத்திற் பற்றுவிட்டுச் சிவசத்தோடு சேர்ந்த உயிர், மீளவும் அந்த அறியாமையுலகோடு பற்றுக்கொள்ளுமோ என்று சிலர் எண்ணக் கூடும். ஆதலால் சிவசத்தோடு சேர்ந்த உயிர் திரும்பவும் உலகுக்குப் பற்று நிலையில் வராது என்றுங் காட்ட வேண்டியிருக்கிறது. கடலைச் சேர்ந்த ஆற்று நீர் மீண்டு உலகத்திற் பரவுவதில்லை; கடலைச் சேர்ந்த ஆறு சேர்ந்ததுதான்; இது மீளா நெறி; அலைகடலில் சென்று அடங்கும் ஆறுபோல் உயிரும் மீளாததே! என்று இச் செய்யுளில் வந்தமை காண்க.

**செய்யுளின் பொருள் :**

சிறை செய்ய நின்ற செழும்புனலின் - அணைகட்டித் தேங்கி நின்ற மிக்க நீரைப் போல; உள்ளம் சிறை செய் புலன் உணர்வில் தீர்ந்து - உயிரென்பது, அறிவு விளக்கத்துக்காக இறைவன் பொருத்திய ஐம்பொறிகள் முதலிய கருவியறிவுகளிற் பற்றுவிட்டு; சிறைவிட்டு - அக் கட்டிலிருந்து நீங்கி; அலைகடலில் சென்று அடங்கும் ஆறுபோல் - அலைகளை உடைய கடலிற் சென்று அக் கடலிலேயே அடங்கிவிடும் ஆற்றைப் போல்; உலைவு இல் அரன் பாதத்தை உற்று மீளாது - அழிவு இல்லாத அரன் திருவடிகளை அணைந்து மீண்டும் உலகமுகம் திரும்பாது.

மலக்கட்டில் உயிர், பொருந்தி நிற்றலாலும், அதனுல் ஓரளவு உயிரறிவு மிகுதலாலும், 'சிறை செய்ய நின்ற செழும் புனல்' உவமையாய் வந்தது. அழியாப் பெருநிலையை எய்திவிட்டமையால் உயிர் மீளுதற்கு வேறு காரணமில்லையாதலின், அரனை 'உலைவு இல் அரன்' என்ருர். உள்ளம் மீளாது என்க.

இவ்வாறு தெரிவித்தும் வேறு சிலர் வேருேர் ஐயம் கொண்டனர்; அவர், 'சிவாத்துவிதர்' 'உயிர் மீளாது என்று ஏன் சொல்லவேண்டும்?' 'எல்லாம் சிவமாகக் காணும்நிலை உடையவர்க்கு, மீண்டால் என்ன மீளாமற் போனுல் என்ன' என்பது அவர் கருத்து.

இங்கே மீளுதல் என்பது தன்முனைப்போடு மீண்டும் பற்றுச் செய்தல், அப்படிப் பற்றுச் செய்யமாட்டார் என்றதனுல், எல்லாம் சிவமாகக் காண்பதற்கு ஏதும் தடையில்லை. அசத்தாகிய உலகப் பொருள்களில் மீண்டார் என்று அத்தகையவரைக் கொள்வதற்

கில்லை. ஏனென்றால், அவ்வசத்துப் பொருள்களைக் காண்பதும் தொடர்வதும் பயன் கொள்ளுவதும், பிறர்க்காகச் செய்ய நேர்ந்தன; தம்மளவில் ஞானிகள் அவற்றோடு இணங்காமலே யிருப்பர்.

"நல்லாரைக் காண்பதுவும் நன்றே, நலமிக்க
நல்லார் சொல் கேட்பதுவும் நன்றே, - நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே, அவரோடு
இணங்கி இருப்பதுவும் நன்று"

என ஒளவையார் அருளிய திருவாக்கில், காண்பது முதலியன வேறு இணங்குதல் வேறு என்பது தெரிகிறது. ஞானிகள் சிவ சத்தைச் சேர்ந்தபின் தன்முனைப்பும் அகப்பற்றும் இன்றி உலகத்தில் மீள்வது, மீள்வதாக ஆகாது; அவர்கள், முன்போற் கட்டுநிலையில் வாரார்.

மேலும் ஞானிகள், எல்லாம் சிவமாகக் காண்பாரே யல்லாமல் அப் பொருள்கள் உண்மையில் சிவமாய் விடா.

"எவ்வுருவும் தானென்னின் எய்துவா ரில்லைதாள்;
இவ்வுருவின் வேறேல் இறையல்லன்; - எவ்வுருவும்
கண்போல் அவயவங்கள் காணா; அக் கண்ணில்லார்
கண்பேறே காணக் கழல்."

உருவுகள் இறைவனாகவே ஆகிவிடுவதில்லை என்பது இச் செய்யுளில் வந்தது. அப்படி எல்லாப் பொருள்களும் சிவமே யானால், சிவத்தினால் ஆகும் பயன் தனியாக எதுவும் இல்லை யாகும்; சிவத்தின் திருவடிகளை அணைவாரும் இல்லை.

பொருள்கள் வேறு, சிவம் வேறு, என்று பிரித்துவிடுவதற்கும் இல்லை. இது என்ன முறை என்று கேட்கத் தோன்றும். வேறானால், அவன் இறைவனல்லன். ஏனென்றால், அவன் தலைவனாய் இருந்து எல்லாப் பொருள்களிலும் பொருந்தி இயக்கி விடுகிறான். அதற்காக அவற்றோடு கலப்பில் ஒன்றாயிருக்கின்றான்.

உடம்பிற் காணப்படுகின்ற ஐம்பொறிகளும் பொறிகள் என்றே பெயர் பெறுகின்றன. உயிர் அந்த ஐந்து பொறிகளுக்குள், வேற்றுமை கொள்வதில்லை. ஆயினும், ஒவ்வொன்றும் ஒவ்வொரு தன்மையுடையவை. மெய் வாய் மூக்குச் செவிகளாகிய பொறிகள் எவையும் கண்ணின் தன்மை உடையன அல்ல; கண் போல் அவை மிகத் தொலைவிலும் சென்று காணமாட்டா,

கண்ணில்லாக் குருடர்கள், பொருள்களைக் காண்பதற்குக் கண் பெற்றால், கண்ணின் வெற்றியை அப்போது கண்டு கொள்வர்.

இப்படிப் பொறிகள் வேறு வேறு தன்மையுடையனவாயினும் உயிர் அவ்வெல்லாவற்றோடும் இரண்டறக் கலந்து தானென வேறின்றியே தன் தன்மைக்கும் பங்கமின்றித் திகழ்கிறது; அப்படித்தான் சிவமும் எல்லாமாய் விளங்குகிறான்.

இவையெல்லாம் இச் செய்யுளில் வந்த கருத்துக்களாகும். 'கண்ணில்லார் கண் பேறே காணக் கழல்' என்பதற்குக், 'கண் ணில்லாக் குருடர்கள் கண்ணின் வெற்றியைக் காண்பதற்குக் கண் பெற்ற பேறே' என்பது பொருள். கழல், என்பது இங்கே வெற்றி.

*"ஐம்பொறியின் அல்லலெனும் அந்த கரசிவனை*
*ஐம்பொறியை விட்டங் கணைசகலன் — ஐம்பொறியின்*
*நீங்கான் நீர்ப் பாசிபோல் நீங்குமல கன்மம் வரின்,*
*நீங்கானை நீங்கும் நினைந்து."*

அந்நிலையில் தோன்றும் மற்றோர் ஐயத்திற்கு இச் செய்யுள் விடை கூறுகின்றது. 'கடலைச் சேர்ந்த ஆறு கடலின் உப்புத் தன்மை பெற்று மீண்டும் கழிகளில் வருதலுண்டு என்று நூல்கள் கூறு கின்றனவே, அது எப்படி?' என்பது அந்த ஐயம்.

'ஆற்றால் அலைகடற்கே பாய்ந்த நீர் அவ்வாற்றான் மறித் திடலும்' என்று திருக்களிற்றுப் படியாரில் வருகின்றது. இப்படிச், சிறிதே வரும். நெடுந்தூரம் வராது. இது பற்று அற்றபின் ஒரோஒருகால் சிலர்க்கு உண்டாகும் மலவாதனையைப் போன்றது. ஆதலால், இதற்கும் மீண்டு வருதற்கும் அதாவது பற்றறுவதற் கும் தொடர்பில்லை.

மேலும் இந்த வாதனை என்பது, மூன்று வகையான உயிர் வகைகளில் சகலர் என்னும் ஒரு வகையார்க்கு மட்டுமே நேர்வது; இதனையும் நீக்கிக்கொள்ள அவர்களுக்கு ஒரு வழி உண்டு.

கடலைச் சேர்ந்த ஆறு மீண்டு சிறிது வரும்போது கடலின் தன்மையாகிய உப்புச் சுவையை அடைந்தே வரும். அதுபோல அவாவுடைய சகலரும் கடவுளின் இயல்புச் சுவையை அடைந்தே வருவர். கடவுளை நீள நினைப்பதனால் இச் சுவையுணர்வு தோற்று கிறது. ஆதலால் அவாக் கொண்டவரெல்லாம் கடவுளை நினைந்து அவர் இயல்பைப் பெறுவதால், அச் சிறு வாதனையையும் நீக்கிக் கொள்ளலாம்.

**பொருள் :**

ஐம்பொறியின் அல்லை என்னும் அந்ததர - ஐம்பொறிகளைப் போல் அசத்து அல்லை என்று தெரிவிக்கப்படுகின்ற தீவிரச் சித்தாந்தியாகிய மாணுக்கரே!; ஐம்பொறியை விட்டு அங்கு சிவனை அணை சகலன் ஐம்பொறியின் நீங்கான் - ஐம்பொறிகளைப் பற்று விட்டு அந்நிலையில் சிவனை அணையும் சகலன் என்னும் ஒருவகை உயிர், புறத்துறவாய் அவ்வைம்பொறிகளை விட்டு நீங்கமாட்டான்; நீர்ப்பாசிபோல நீங்கும் மலகன்மம் வரின் - கல்லெறிந்தால் நீரில் பாசி நீங்குவதுபோல நீங்குகின்ற மலகன்ம மாயைகள் வாதனையாய்த் திரும்பப் பாய்ந்து வந்தால்; நீங்கானை நினைந்து நீங்கும் - எப்போதும் தன்னைவிட்டு நீங்காத சிவத்தைச் சிந்தித்து அவ் வாதனைகளிலிருந்து அச் சகலர் நீங்கக் கூடும்.

சகலரை மட்டும் இச் செய்யுளிற் கூறினமையால் 'பிரளயாகலர்' 'விஞ்ஞானகலர்' என்னும் இருவகை உயிர் வகைகளுக்கு அவ்வாறு வாதனை உண்டாவதில்லை என்பது பெறப்பட்டது. தீவிரச் சித்தாந்தியார்க்கும் அவ்வாறு உண்டாவதில்லையாதலால் 'ஐம்பொறியின் அல்லையெனும் அந்ததர' என்று மாணவரை விளித்துக்கொண்டார். அருள் வீழ்ச்சியுற்றுல் (சத்திநி பாதம்) மலகன்மப் பாய்வு அந் நிலையில் நீங்கிவிடுமாதலின், கல்லெறிந்தால் நீர்ப்பாசி நீங்குதல் கூறப்பட்டது. வரின் என்றது பெரும்பாலும் வராது என்னும் பொருட்டு. தன்னிலிருந்து நீங்காமையால் அவனைச் சிந்திப்பது எளிது என்னுங் கருத்தில் 'நீங்கானை' என்ருர்.

**பயனியல் - பத்தாம் நூற்பா :**

பத்து பதினொன்று பன்னிரண்டாவது நூற்பாக்கள் மூன்றும் பயனியலைச் சார்ந்தவை. உண்மையதிகாரத்தில், 'பயிற்சியியல்' 'பயனியல்' என்று இரண்டு உண்டு. 'பயிற்சியியல்' ஏழு முதல் ஒன்பது வரையில் மூன்று நூற்பாக்கள்; அவை முறையே, பக்குவ உயிரையும், குரு வருகையையும், அவர் நெறியில் உறுதியாய் நிற்றற்குத் திருவைந்தெழுத்து எண்ணுதலையும், விளக்கின.

பயிற்சியின் பயனைக் கடைசி மூன்று நூற்பாக்களிலும் சிவஞானபோதம் சொல்லுகிறது. பத்தாம் நூற்பாவில் மலத்தை விடுதலும், பதினோராம் நூற்பாவில் சிவத்தை அடைதலும், பன்னிரண்டாம் நூற்பாவில் அவை நிலைபெறும் பொருட்டு உரிய இடங்களில் வழிபடுதலும் வருகின்றன.

பத்தாம் நூற்பாவின் கருத்துப்படி, மலம் நீங்கிய விடு தலையை உயிர் தனது உணர்வில் நேரே தெரிந்துகொள்கிறது. பதிஞானம் பெற்ற பக்குவ உயிர், சிவசத்தோடு சேர்ந்து அதன் வண்ணமாகி ஒற்றுமைப்பட்டு, அதன் செயலே தன் செயலாகக் கொண்டு (இறைபணியாகக் கொண்டு) நடந்து வந்தால், மல மாயைகளோடு வலிய வினைகளும் இல்லாமற் போகின்றன.

''அவனே தானே ஆகிய அந்நெறி
ஏக னாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே''

என்பது நூற்பா.

சிவத்தொடு சேராமுன், உயிர், உலகப் பொருள்களோடு சேர்ந்திருந்தது. அப்போதும், உயிரின் அறிவை இறைவனே கருணையால் இயக்கிக்கொண் டிருந்தான்; உயிர் அவ்வுண்மையை அறியாமல் தானே அறிவதாக எண்ணித், தன்னையே மதித்துக் கொண்டிருந்தது. 'எனது' என்று உலகப் பொருளை எண்ணிக் கொள்வதும், 'யானே' என்று, தன்னை மதித்துக் கொள்வதுமாய் இருந்தது. 'அவன்' என்னும் கடவுள், தானே எனவும் உயிர் செருக்குக் கொண்டது.

இவ்வாறு, 'அவனே தானேயாகிய அந்நெறிமுறையில்,' பின்பு உயிர் சிவத்தை உணர்ந்தபின்னும், சிவம் உயிரின் ஞானத்தை முன்போலவே இயக்கிக்கொண்டுதான் இருக்கிறது. உயிரின் எண்ணந்தான் இதில் மாறுதல்!

'எனது' என்பதும் 'யான்' என்பதும் வீண்செருக்குகள்; மேலும், 'எனது' என்னும் உலகமும் 'யான்' என்னும் உடம்பும் உயிர்க்கு வேருனவை; எல்லாம் முதல்வனாலேயே இயக்கப்படு கின்றன. ஆதலால், இதுவரையில் உலகத்தையும் உடம்பையும் அறிந்துகொண்டிருந்தது போல, உயிர் இனி இல்லை; இயக்கும் முதல்வனைத் தொடர்ந்து உணர்கிறது. இணங்கி அவனோடு ஒற்றுமைப்படுகிறது; அவன் அருளைப் பெறுகிறது. அவ்வுணர் வால் உலகம் உடம்புகளைப் பற்று இன்றிப் பயனைமட்டும் அறிந்து பயன்படுத்திக் கொள்கிறது, அருளோடு ஒத்துப் போகிறது. அருளால் பணிகள் நடைபெறுவதனால், அவை 'இறைபணி'யாக முடிகின்றன.

அவ்வாறு இருவகைச் செருக்கும் அற்றுக், கடவுள் யானே என்பதும் நீங்கி, அளவைகளால் அறியும் அறிவு நிலையிலிருந்து வேறுபட்டு, அருளுணர்வு நிலையாகி அவ்வுணர்வால் வழக்கம்

போல் எச்செயல் செய்தாலும் அது இறைபணியே ஆதலைத் தெளிந்து அதனைச் செய்துவரலாமே! அப்போது, நம் அறிவுநிலை உணர்வு நிலையாகித் தெளிவையும் உண்மையையும் அடைதலால், அறியாமை மலம், சிறிது அறிவை விளக்க வந்த மாயை மலம், இவற்ருேடு பிறவிக்குக் காரணமான வலிய உடல் ஊழ் என்பன வற்ருல், உயிர்கள் தாக்கப்படுவதில்லை; மலங்களால் உயிர்கள் செயல்படுவதில்லை; 'அருளால் இறைபணி செய்கின்றன. மக்களுக்கு இங்ஙனம் மும்மலங்களும் நீங்குதல் நற்பேறு; பக்குவ உயிர்கள் இதனை உடனே அடைகின்றன.

பக்குவ உயிர் என்பது, சரியை கிரியை யோகங்களை முன் செய்து, (அதாவது, 'நடத்தை' 'வழிபாடு' 'ஒருமையாகிய பொதுமை' அடைந்து) இப் பக்குவத்தால் ஞானம் அடையவும், ஞானத்தால் வீடு அடையவும் கூடும்; அந்நிலையிற் குரு எழுந் தருளித் தீக்கையால் வழி காட்டுவார்.

உயிர்கள் செய்து வந்த வினைகள் பிறவிதோறும் தொகுப் புண்டு கிடந்தது, (சஞ்சிதம்).

ஆசிரியரின் தீக்கையால், அது, தீய்ந்து போம்; மேல் வினைகள் (ஆகாமியம்) ஆசிரியரால் உண்டாக்கப்படும் ஞான உணர்வினுல் நீக்கப்படும். உடல் ஊழாக வந்ததுவும் (பிராரத் துவம்) உடல் இருக்கும் வரையில் நிகழ்ந்துகொண்டிருந்து ஆசிரி யரின் தீக்கை வலிமையால், அவையும் மெலிந்து தாக்கும்படி குறைக்கப்படும். இவ்வாற்ருல், ஆசிரியர் வழங்கும் 'பதிஞானம்' வரவரப் பெருகிவந்து, 'இறைபணி'யாகும்.

தீக்கை இன்றியமையாதது; அவரவர் பக்குவத்துக் கேற்ற படி தீக்கையின் நலங்கள் நிகழும்.

வாழ்க்கையில் தீக்கை இவ்வளவு இன்றியமையாததாய் இருப்பதனுல், நலங்கள் விரும்புவோர், சிறு வயதிலிருந்தே மாணுக்கராகிக் குரவர் நெறியிற் பயின்று வரவேண்டும். ஐந்து வயதிற் பள்ளி சென்ருல், ஏழு வயதில் தீக்கை பெற்றுக் கொள் ளுதல் முதன்மையாகும். சிவ சமயத்தில் ஆணுக்குரிய அருள் நலங்கள் பெண்ணுக்கும் உரியவாதலால், இருபாலாரும் தீக்கை பெற்றுப் பழகி வருதல் இன்றியமையாதது! "மாதர்கள் மைந்த ரோடும் பாலெனவே மொழிந்தேத்தும் ஆரூர்ப் பசுபதீச்சரம்" என்று திருஞான சம்பந்தர் தமது முதல் திருமுறையில் ஓதுவார்.

(தொடரும்)

# பழந்தமிழில் மக்கட் பெயர்

[பன்மொழிப்புலவர் இரா. மதிவாணன்]

(சிலம்பு இஉ, பரல்-௩உ, ௬0அ ஆம் பக்கத் தொடர்ச்சி)

**35.** அறுகை

அறுகை என்பவனைப் பதிற்றுப்பத்தில் (44 : 10) பரணர் பாடியுள்ளார். இவனொரு குறுநில மன்னன். தமிழில் அறு என்னும் முதனிலை அன்பு, நட்பு என்று பொருள் தரும் பெயர்ச் சொல்லாகவுள்ளது. கன்னடத்தில் 'அறுகொள்' என்றால் அன்பு கொள், அன்பு செய், அன்புடையவனாகு என்று பொருள். அறு+கை=அறுகை. ஒ. நோ. பூண்+கை=பூட்கை. அன்பு என்பதன் முதனிலையாகிய அல் - அறு (அன்பு) எனத் திரிந்தது. நில் - நிறு(வு), நிறுத்து எனப் பிறவினைப் பொருளில் வல்லின மாதலைக் காண்க. எனவே, அறுகை என்னும் ஆண்பாற் பெயர் அன்பன், நண்பன் என்னும் பொருளில் வழங்கிய இயற் பெயராகும்.

**36.** அன்னி

அன்னி என்னும் தலைவனைக் கயமனார் அகம் 145ஆம் பாடலிலும், நக்கீரர் அகம் 126 ஆம் பாடலிலும் வெள்ளிவீதியார் அகம் 45 ஆம் பாடலிலும் பாடியுள்ளனர். அன்னி என்னும் அரசன் நற்றிணை 180 ஆம் பாடலில் குறிப்பிடப்படுகிறான். நற்றிணை உரையாசிரியர் இவனை அன்னிக்குடியில் தோன்றிய அன்னி என்கிறார். கன்னடத்தில் அன்யன் என்பது ஒரு குடிப் பெயராகவும்[1] ஆண்மகனின் இயற்பெயராகவும் வழங்குகிறது. தெலுங்கில் அன்னி என்னும் சொல் சான்றோனைக் குறிக்கிறது. துளு மொழியில் அன்னி, அன்னு, அன்னப்பு என்பன ஆண் களின் இயற்பெயர். ஆலுதல் - நிறைதல் என்னும் வினை யடியாகத் தோன்றி நெடுமுதல் குறுகி அன்னி என்னும் வடிவம் பெற்று இச் சொல் ஆண்பாற் பெயராயிற்று என்று தெரிகிறது.

சான்றோன், நிறைவுடைய பண்பாளன் என்னும் பொருளில் தமிழர் தம் மைந்தர்க்கு அன்னி எனப் பெயரிட்டது போல

---

1. South Indian Inscriptions Vol. I Government of India, Central Publication Branch, Calcutta.

இதே பொருளில் கிறித்தவர் ஆர்தர், பாட்ரிக் எனப் பெயரிட்டுக் கொள்வது வழக்கம். வடமொழியாளர் வரகுணன், புருடோத்தமன் எனப் பெயரிடுவதும் இப் பொருள் குறித்தேயாம்.

## 37. அன்னி மிஞிலி

அன்னி மிஞிலி என்னும் குறுநில மன்னனை, பரணர் அகம் 196, 262 ஆம் பாடல்களில் பாடியுள்ளார். முன் காட்டியவாறு, 'அன்னி' குடிப் பெயராயும் வருதலின், மிஞிலி என்பது இத் தலைவனின் இயற்பெயராதல் வேண்டும். மிஞிலி எனப் பெயர் பூண்ட மகளிரும் பழங்காலத்தில் வாழ்ந்திருந்தனர். மிஞிலி மயிலைக் குறிக்கும் சொல். இக்காலத்தில், மயிலி, மயிலம்மாள் எனப் பெயரிட்டுக் கொள்வதுபோலப் பழங்காலத்தில் மகளிர்க்கு மிஞிலி எனப் பெயர் சூட்டினர். இனி, மிஞிலி (மின்னுபவன்) - ஒளியோன் எனவும் பொருள்படும்; க. மிஞ்சு - ஒளிவிடு. ஒளியின் அடிப்படையாகப் புகழாளன் என்னும் பொருள்பட, ஆண்பாற் பெயர்கள் அமைவது இயல்பாகலின் மிஞிலி ஆண்பாற் பெயராயிற்று என்பது ஒரு கரணியம்.

மிஞிலி, மயிலைக் குறித்த சொல்லாயின் பெண்பாற் பெயராகுமேயன்றி ஆண்பாற் பெயராகாது என்பார் உள ராயினும், தோகை (ஆண் மயில்)யைச் சுட்டும் மிஞிலி (ஒளிமிக்க தோகையை உடையது) ஆண்பாற் பெயராக வழங்கும். தயரதனின் மரபை 'மயில் முறைக்குலம்' என்கிறார் கம்பர். மயிலின் முட்டைகளிலிருந்து குஞ்சுகள் வெளிப்படும்போது முதலிற் பொரித்த குஞ்சு மூத்ததாதலின், அம் மூத்த ஆண்மயில் தோகையை விரித்து ஆடத் தொடங்கிய பிறகே ஏனைய உடன்பிறந்த மயில்கள் தோகையை விரித்து ஆடத் தொடங்கும். இவ்வுண்மையை அமெரிக்க நாட்டுப் பறவையியலாரும் ஆய்ந்து வெளிப்படுத்தியுள்ளனர். தலைமை யேற்றுத் தன் குடியை முன்னின்று நடத்திச் செல்பவன் என்னும் பொருள் பொருந்த, ஆண் குழந்தைகளுக்கு மிஞிலி எனப் பெயர் சூட்டுவது பண்டையோர் வழக்கம் என்பது இரண்டாவது கரணியம். தமிழர் மரபுப்படி, ஒருகுடிப் பிறந்த பல்லோருள்ளும் மூத்தோனை வருக வென்னுமல் சிறப்புடை யாளன் பின்பிறந்தவனாயினும் அவனையே ஆள்குடித் தலைமை யேற்க அழைப்பராதலின், மூத்தமகனுக்கே முடிசூட்டும் ஆரியர் வழக்கம் தமிழர்க்குப் பொருந்தாது.

மிஞிலி ஆண்பாற் பெயராய் வழங்குதற்குரிய மேற்கண்ட இரண்டு கரணியங்களுள் பின்னதே வலிவுடையதாகிறது.

ஏனெனின், அன்னி என்னும் குடிப்பெயர் சால்புடைமையைக் குறிப்பதால் புகழுடைமையையும் உடன் குறிக்கும் தன்மைத்து. தலைமை தாங்கும் தகைமை குறித்த ஆண் மயிலின் 'மிஞிலி' என்னும் பெயரே அன்னி மிஞிலியின் இயற்பெயராதல் வேண்டும்.

கிறித்தவரின் ஆண்பாற் பெயர்களில், இஞ்ஞாசி-ஒளிருநன் எனப் பொருள்படுதலையும், சோனாசு புருவின் பெயராக இருத்தலையும், ஆபிரகாம் - இனமுதல்வன் எனப் பொருள் படுதலையும், காண்க. வடமொழிப் பெயர்களுள், சிசுபாலன்-குடிக் காவலன் என்றும், நேதாஜி - வழிகாட்டி என்றும், மனோகரன் - மனங்கவர் அழகன் என்றும் பொருள்படுதலை இதனுடன் ஒப்பிட்டுக் காண்க.

## 38. ஆட்டனத்தி[1]

ஆட்டனத்தி சேர நாட்டு இளவரசன். ஆட்டன் + அத்தி = ஆட்டனத்தியாயிற்று. இவன், கரிகாற் சோழனின் மகள் ஆதிமந்தியின் கணவன். ஆட்டனத்தி அகம், 222, 236 ஆம் பாடல்களில் குறிப்பிடப்படுகிறான்.

கூத்தில் வல்லவன் கூத்தன் எனப்பட்டவாறு போல ஆட்டில் வல்லவன் ஆட்டன் எனப்பட்டான். ஆதலால், ஆட்டன் சிறப்புப் பெயர். அத்தி இயற்பெயர். இவன் கற்ற ஆட்டு எது? என்பது நம்முன் உள்ள வினா. ஆட்டு என்னும் சொல், நடனம், விளையாட்டு, நீரில் மூழ்கி ஆடும் ஆடல் ஆகிய மூன்றையும் குறிக்கும். பல்வகை ஆடல்களிலும் வல்லவனாயின் விதந்து கூறியிருப்பர். நடனத்தில் வல்லவனாயின் கூத்தன் என்னும் பெயரே அக் காலத்தில் அவனுக்கு அமைந்திருக்கும்.

---

1. நீரில் மூழ்குவதில் வல்லவரான முத்துக் குளிப்போர்க்கு முக்குவர் (மூழ்குவோர்) என்னும் பெயருண்டு. ஆட்டன் என்பதும் ஆழ்தலில் (மூழ்குதல்) வல்லவன் என்னும் பொருளில் 'ஆழ்' வினையடியாகத் தோன்றியதாதல் வேண்டும். ஆழ்த்தன் - ஆட்டன் எனத் திரிந்தது. வீழ்த்தினான் - வீட்டினான் எனத் திரிவதை ஒப்பிடுக. இன்றும் தெலுங்கில் (திருமால் அடியாரான) ஆழ்வார்கள் என்னும் சொல் ஆடுவார்லு என ழகரம் டகரமாகத் திரிபடைகிறது. சென்னைப் பகுதியில் இன்றும் மூழ்குதலில் வல்லவர் தூர்வாரிகள் எனப் படுகின்றனர். நீரில் மூழ்குவதில் வல்லவர்க்குத் தனிப் பெயரமைவது உண்டு என்பதை வலியுறுத்த இது இங்குக் கூறப்படுகிறது.

எனவே, நீரில் மூழ்கி ஆடும் விளையாட்டில் வல்லவனுதல் பற்றி இவனுக்கு ஆட்டன் என்னும் சிறப்புப் பெயர் அமைந்திருக்க வேண்டும். தெலுங்கில், ஆட்ட, ஆடு என்னும் இரு சொற்களும் நீரில் மூழ்கு[1] என்னும் முதற் பொருளிலும் நீராடு என்னும் துணைப்பொருளிலும் வழக்குப் பெற்றுள்ளன. தமிழிலும் ஆட்டகம் - நீராடுஞ்சாலை எனப் பொருள்படும்.

'ஆட்டகத்தி லாலைந் திகந்தார் போலும்' (தேவா. 720 : 4)

பழந்தமிழ்ச் சொல்லாட்சிகளில் பாண்டிய நாட்டுப் பழஞ் சொற்கள் பெரும்பாலனவற்றைக் கன்னடமும், சேரநாட்டுப் பழஞ்சொற்கள் பெரும்பாலனவற்றைத் தெலுங்கும் அதே பொருளில் இன்றும் காத்து வருவது இங்குக் குறிப்பிடத்தக்கது. சான்றுகத் தள்ளை (தாய்) என்னும் குடநாட்டுத் (சேரநாடு) திசைச்சொல் வழக்கை, தெலுங்கர் அனைவரும் தல்லி என இன்றளவும் பேசி வருதல் காண்க. ஐந்து கோடி தெலுங்கரும் இச் சொல்லை ஆண்டு வந்தும் கன்னடத்தாரிடையும் தமிழரிடையும் வழக்குப் பெருததை நோக்குக. குமரி நாட்டில் ஆந்திரர் சேரக்கிளை மரபினராகவே இருந்திருத்தல்கூடும் என்பதற்குச் சான்றுகள் பல உள. ஆட்டனத்தி சேரனுக இருந்தும் அவன் பெயரை ஆராயத் தெலுங்குச் சொல்லாட்சியை ஏன் நாடுகிருேம் என்பதற்கு விளக்கமாகவே இதனை இங்குக் குறிப்பிட நேர்ந்தது.

ஆற்றில் நீராடுதலை ஆருட்டு என்பர். வெறுமனே நீராடுதலால் ஆட்டன் என்னும் பெயர் அமையாது. நீருள் மூழ்கி ஒளிந்து விளையாடுவதும், குளித்து (மூழ்கி) மணல் அள்ளி வருவதும், விசையாய் மறுகரைக்கு நீந்திச் செல்வதும், நெடுநேரம் மூச்சடக்கி வெளிவருவதும், எதிர் நீச்சலிட்டு வெல்வதும் ஆகிய பல்வகை நீர் விளையாட்டுப் போட்டிகளில் வல்லவனுதல்பற்றி, ஆட்டனத்தி, இப் பெயர் பெற்றவனுதல் வேண்டும். ஆட்டன் என்னும் சொல் அக்காலத்தில் மூழ்குபவன், மூழ்குவதில் வல்லவன் என்னும் பொருளைச் சிறப்பாகக் குறித்தது எனத் துணியலாம். காவிரிப் புதுப்புனலாட்டின் போது தன் திறமையைக் காட்டுங்கால், யானைக்கும் அடிசறுக்கும் என்பதற்கேற்ப ஆட்டனத்தி வெள்ளத்திலடித்துச் செல்லப் பட்டான். இந்த வரலாறும் மேற்கண்ட கருத்தையே வலியுறுத்துகிறது.

---

1 Telugu Etymological Dictionary.

## 39. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்[1]

ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் பதிற்றுப்பத்துள் ஆறும் பத்தின் தலைவன்; காக்கைபாடினி நச்செள்ளையாரால் பாடப் பட்டவன்.

'குடக்கோ நெடுஞ்சேர லாதற்கு வேள(ள்)
ஆவிக் கோமான் றேவி ஈன்றமகன்
தண்டா ரணியத்துக் கோட்பட்ட வருடையைத்
தொண்டியுட் டந்து கொடுப்பித்துப் பார்ப்பார்க்குக்
கபிலையொடு குடநாட் டோரூ ரீத்து
வான வரம்பனெனப் பேரினிது விளக்கி'

என்னும் பதிகத்தைச் சான்று காட்டித் தண்டாரணியத்து வருடைகளைக் கொணர்ந்த சிறப்பால் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்று பெயர் அமைந்ததாக இன்றுவரை கூறப் பட்டு வருகிறது.

வருடைகளைக் கொணர்ந்தால் வருடை கோட்பாட்டுச் சேரலாதன் என்று பெயர் ஏற்படவேண்டுமே யன்றி ஆடுகோட் பாட்டுச் சேரன் என அழைக்கப்படுதல் முறையன்று. ஏனெனின், வருடை வேறு; ஆடு வேறு என்பது அக் காலத்திலிருந்து இக் காலம் வரை அனைவர்க்கும் தெரிந்த செய்தி. வருடையை மலையாடு,[2] வரையாடு என விளக்கிக் கூறுதலன்றி வெறுமனே ஆடு எனக் கூறார். ஆடு என்னும் சொல்லுக்கு வருடை என்று எந்த அகர முதலியிலும் பொருள் இல்லை. கீழைத்திரவிட மொழியினரும் வருடையை ஆடு எனக் குறிப்பிடுதலைக் காண முடியவில்லை.

மேலும் கடைக் கழக காலத்தில் ஆட்டை 'யாடு' என்று வழங்கினர். அதன்படி நோக்கினும், இம் மன்னன் பெயர் 'யாடுகோட்பாட்டுச் சேரலாதன்' என்றிருக்க வேண்டும்.

---

1. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்பது வெற்றி பேற்றுச் சேரலாதன் அல்லது செல்லும் திசையெல்லாம் வெற்றிபெறும் பேறு உள்ளவன் எனப் பொருள்படுகிறது. 'செங்கோன் தரைச் செலவு' என்னும் பழந்தமிழ் நூலின் பெயரே, அக் காலத்தமிழ் மன்னர் அலக்சாந்தரைப் போல் வெற்றிச் செலவுகளை மேற்கொண்டவர் என்பதையும் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும் அத்தகையவன் என்பதையும் காட்டும்.

2. பதிற்றுப்பத்துப் பழைய உரையாசிரியர் வருடை என்பதற்கு மலையாடு என்று பொருள் கூறுகிறார். மலையாளத்திலும் மலையாடு எனக் குறிப்பிடுகின்றனர்.

தண்டாரணியத்துக் கோட்பட்ட வருடையைத் தொண்டியுட் டந்து கொடுப்பித்ததும் பார்ப்பார்க்குக் கபிலையொடு குட நாட்டில் ஊர்களைக் கொடுத்ததும் அவன் ஆட்சியில் நடைபெற்ற செயல்களுட் சில. 'சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்' என்னும் நூலில் பி. எல். சாமி அவர்கள் வருடை என்னும் மலையாட்டைப் பற்றித் தெளிவான விளக்கம் தந்திருப்பதோடு அவை நீல மலையிலும் தென்னிந்தியாவின் நெடிய மலைமுகடுகளிலும் வாழ்வதை எடுத்துக் காட்டியுள்ளார். தென்னகத்தில் அதுவும் மேலைமலைத் தொடரில் காணப்படும் வரையாடு வருடைகளுக்காகச் சேரலாதன் தண்டாரணியத்துக்குச் சென்றிருக்க வேண்டியதில்லை. கி. பி. முதல் நூற்றாண்டில் மேலைமலைக் காடுகளில், குறிப்பாகக் கொண்கானக் காட்டில் அரிமா (சிங்கம்) வாழ்ந்திருந்ததாக வட்டாராதனை என்னும் கன்னட நூல் (சமண முனிவர்களின் வாழ்க்கை வரலாறு) குறிப்பிடுகிறது. அரிமாவையே தமிழர் தம் காடுகளில் கண்டபோது வருடை காணப்படாத விலங்கன்று. பி. எல். சாமி அவர்கள் குறிப்பிடுவதுபோல் வருடையை வேட்டையாடுவது அருஞ்செயலாக இருக்கலாம். அது வேட்டைத் திறனைக் காட்டுமேயன்றிப் பகைவரை எதிர்த்துப் பெற்ற வெற்றியாகாது. தண்டாரணியத்துத் தன்னை எதிர்த்தோரை வென்று அவர்களிடம் திறைப் பொருளாக அல்லது கொள்ளைப் பொருளாகக் கொள்ளப்பட்ட (கோட்பட்ட) வருடைகளைப் பிறர்வழி தொண்டிக்கு ஓட்டிச் செல்லச் செய்துவிட்டு இம் மன்னன் தண்டாரணியத்தின் அடுத்த பகுதிகளில் வெற்றிப் பயணம் அல்லது போர்ச் செலவை மேற்கொண்டவனாதல் வேண்டும். கோட்பட்ட வருடை, தொண்டியுட்டந்து கொடுப்பித்து என்னும் பிறவினை வாய்பாடுகள் இதனை விளக்கும்.

பதிகம் இம் மன்னனுக்குத் தரும் பட்டப்பெயர் 'வான வரம்பன்' (எனப் பேரினிது விளக்கி) என்பது. ஆடுகளை வென்றதால் பெற்ற பெருவெற்றி பட்டப் பெயராயின் 'ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் எனப் பேர் இனிது விளக்கி' என்று பதிகம் கூறியிருக்க வேண்டும்.

தண்டகாரணியத்துக்கு அப்பாலும் உள்ள நாடுகளை வென்று வான எல்லை வரை (கண்ணுக்கு எட்டிய வரை) தன்னாட்டை விரிவுபடுத்தினான் என்பதாலும், வானவரை மகிழ்விக்கும் வேள்வி நடத்த பார்ப்பனர்க்கு நிலக் கொடையளித்தான் என்பதாலும் 'வானவரம்பன்' என்னும் சிறப்புப் பெயரை முதன் முதலாகவோ அல்லது குடிவழி வந்த குடிப்

பெயரைத் தனக்கும் பொருந்துமாறே புனைந்தவன் என்றே பதிகம் பொருள்படுகிறது.

ஆடு வினைச் சொல்லாக வரும்போது அசைதல் என்னும் பொருளேயன்றி, வெல்லுதல், கொல்லுதல், சமைத்தல் ஆகிய பொருள்களிலும் வரும்.

ஆடு - கொல்லுதல்.

'ஆடுகொள் வென்றி'　　(புறம். 67)

ஆடு - சமைத்தல்.

'ஆடுநனி மறந்த கோடுயர் அடுப்பு'　　(புறம். 164)

ஆடு - வெற்றி.

'ஆடுகொள் நேமியான்'　　(கலி. 105 - 70)

'ஆடுகொள் வரிசைக் கொப்ப'　　(புறம். 53)

மேற்கண்ட மூன்று சொற்களும் 'அடு' (கொல்) வினைச்சொல்லின் முதனிலை நீண்ட தொழிற்பெயர்கள். வெற்றி என்று பொருள் படும் 'ஆடு' என்னும் சொல்லே ஆடு கோட்பாட்டுச் சேரலாதனின் பெயரில் முதலில் அமைந்துள்ளது.

கோட்பாடு என்னும் சொல் இருவேறு புணர்ப்பில் இருவேறு பொருள் தந்து நிற்கும். கடப்பாடு, திறப்பாடு, இலம்பாடு என்றாற்போல் கோட்பாடு ஒரு சொல் நீர்மைத்தாகி முதனிலைப் பொருளே பொருளாய் 'பாடு' பண்புப் பெயரீறாய் நிற்கும். கோட்படு என்னும் இணைவினையில், படு என்னும் துணைவினை முதனிலை நீண்டு கோட்பாடு என வழங்கும். இதற்குக் கொள்ளப்படுதல் என்று பொருள். கோட்பாடு (கோள் + படு) என்னும் இந்த இரண்டாம் துணை வினைச்சொல் தெலுங்கில், கோள்பாடு - இழத்தல், இறத்தல் என்றும், கன்னடத்தில் கோள்படு - கொள்ளையிடப்படுதல் என்றும் வழங்கி வருகிறது.

பண்புப் பெயராகவும் தொழிற்பெயராகவும் ஒரே சொல்லாக நிற்கும் முதலில் காட்டிய (பாடு - பெயர்ச் சொல்லீறு) 'கோட்பாடு' முதனிலைப் பொருளே ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் பெயருக்குப் பொருத்தமுடையதாகும். மலையாளத்தில் கோளாளி, கோள்காரன் என்னும் சொற்கள் வாங்குபவன் பெறுபவன் என்று பொருள்படுகின்றன. கோள் -

துணிபு, கொள்கை என்று பொருள்படுதலை 'மாசற்றார் கோள்' (குறள். 646) என்னும் வள்ளுவர் வாய்மொழியானும் அறியலாம்.

எனவே, ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்பதற்கு, வெற்றி பெறுவதைத் தன் கொள்கையாகவும், அரசனாகிய தான் பெறத்தக்க கொள்ளைப் பொருளாகவும் கொண்ட சேரலாதன் எனப் பொருள் கொள்வதே ஏற்றதாகும்.

தான் மேற்கொள்ளும் செயல்களில் வெற்றி காண்பதை நோக்கமாகக் கொண்டவன் என்னும் பொருளில் பாண்டியன் ஒருவன் வெற்றிவேற்செழியன் எனப் பெயரிடப்பட்டான். சேரருள் ஒருவன் இதே பொருளில் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் எனப் பெயரிடப்பட்டான். இப் பெயர் பெற்றோரிட்ட இயற்பெயராதல் வேண்டும்.

வெற்றிவிருப்பினன் என்னும் பொருளில் ஆங்கிலேயர், 'விக்டர்' எனப் பெயரிட்டுக் கொள்வதையும், போர்நேயன் என்னும் பொருளில் 'மார்ட்டின்' எனப் பெயரிட்டுக் கொள்வதையும் விஜயன், ஜெயதேவன், ஜெயராஜ் என்னும் வடமொழி ஆண்பாற் பெயர்களையும், விஜயா, ஜெயக்கொடி, ஜெயம்மாள் என்னும் பெண்பாற் பெயர்களையும் ஒப்பிட்டுக் காண்க.

—தொடரும்.

**செல்வர்கள் மனம் வைத்திருந்தால்...!**

நமது தமிழ்நாட்டுச் செல்வர்கள் நூல் எழுதும் ஆற்றல் வாய்ந்த தமிழறிஞர்க்கு வறுமை தீரப் பொருளுதவி செய்திருப்பார்களாயின் இதுகாறும் எத்தனையோ அருந்தமிழ் நூல்கள் பேரறிஞர்களால் எழுதப்பட்டு வெளிவந்திருக்கும்.

—மறைமலையடிகள்.
(மறைமலையடிகளார் அறிவுரைக்கோவை, பக்: 150)

# எமது பாகூர்ச் செலவு*

[டாக்டர் மா. இராசமாணிக்கனூர்]

பாகூர் என்னும் பழம் பதி புதுச்சேரியிலிருந்து கடலூருக்குச் செல்லும் (உந்து வண்டிப்) பாதையில் பன்னிரண்டு கல் தொலேவில் அமைந்துள்ளது. அப் பதியில் பண்டைப் புகழ் வாய்ந்த சிவன் கோவில் ஒன்று நிலேபெற்றுள்ளது. அதனைக் காணும் பேரவாவுடன் யான், புதுவைக் கல்விக் கழகத்தலேவர் இரா. தேசிகன் அவர்கள், செயலாளர் திருவாளர் இரா. திருநாவுக்கரசு அவர்கள், கழக உறுப்பினர் வி. ந. நாகமாணிக்கம் அவர்கள், பொ. செல்வத் தொகுப்பாளன் ஆகியவருடன் அப் பெருமை மிக்க மூதூரைக் காண விழைந்து, பாகூரை அடைந்தேன். அங்குள்ள காவல் துறை உண்ணுேட்டகர் பசவா சுப்பராயலு** அவர்கள் எங்களேப் பெரிதும் வரவேற்று உண்டி முதலியன அளித்து, மாலே இரண்டு மணிக்குமேல் அக் கோவிலேப் பார்வையிடுவதற்கு மகிழ்வுடன் அழைத்தேகினர். அக் கோவில் குருக்களாகிய திருவாளர் **சின்ன சாமி குருக்கள்** என்பவர் குழைந்த உளத்தராய்க் கோவிலின் ஒவ்வொரு பகுதியையும் காட்டி விளக்கிக் கூறினுர்.

## I. சிவன் கோவில்

**முதற்சுற்று :**

இச் சிவன் கோவிலுக்குக் **கோபுரம் இல்லே** என்பது குறிப்பிடத் தக்கது. இது கிழக்கு நோக்கிய வாயில் ஒன்றையே உடையது. அவ் வாயில் மண்டப வேலேப்பாடு கொண்டது. கோவிலின் மதிற் சுவர், முதலில், சுட்ட செங்கற்களாலும் சுண்ணும்பினுலும் அமைந்தது. ஆனுல், அதன் பகுதிகள் அழிந்துபட்ட பிற்காலத்தில் கல் வரிசை இடப்பட்டது. கோவிலின் முதல் சுற்றில்—வெளி மதிலின் உட்புறத்தில்—வாயிலுக்கு வலப்பக்கம் **சூரியன் சிறு கோவிலும்** இடப்பக்கம் **வயிரவர் சிறு கோவிலும்** அமைந்துள்ளன. முதல் வாயிலுக்கு அடுத்த வாயிலின் இடப்பக்கம் **திருஞான சம்பந்தர்** கைத்தாளம் பெற்று நிற்பது போன்ற உருவமும், வலப் பக்கம் பிள்ளேயார் உருவமும், காணப்படுகின்றன. முதல் வாயி

* இக் கட்டுரை டாக்டர் இராசமாணிக்கனுர் அவர்களால் 1941 ஆம் ஆண்டில் 'செல்வி'க்கு எழுதி அனுப்பப்பட்டது.

** இவர் புதைபொருள் ஆராய்ச்சிபற்றி பறிந்தவர்.

லுக்கும் இரண்டாம் வாயிலுக்கும் இடையிலுள்ள இடத்தில் அழகிய நந்தி ஒன்று காட்சி அளிக்கிறது. அஃது ஒருபுறம் சாய்ந்த நிலையில் இருந்துகொண்டு மூலஇலிங்கத்தைப் பார்ப்பதுபோல அமைந்துள்ள திறம் கவனித்தற்குரியது. பெரும்பாலான கோவில்களில் உள்ள நந்தி நேரே நோக்கியபடி அமைந்திருக்கும். நந்தியின்மீது சிறிய மணிகள் கோக்கப்பெற்ற அழகிய ஆடை (ஆசனம்) போர்த்தப் பெற்றுள்ளது ஊன்றி நோக்குதற்கு உரியது. இந் நந்தியின் கழுத்தில் மணி கொண்ட கயிறு ஒன்று கட்டப்பெற்று இருப்பதே போல் அமைந்த வேலைப்பாடு அழகியது.

**திருச்சுற்றில் உள்ள கோவில்கள் :**

திருச்சுற்றை வலம் வருங்கால் பல சிறு கோவில்கள் காட்சி அளிக்கின்றன : (1) அருணசலேசுவரர் என்னும் பெயர் கொண்ட தனி இலிங்கத்தைக் கொண்ட சிறு கோவில், (2) பிள்ளையாரைக் கொண்ட சிறு கோவில், (3) விருத்தபுரீசுவரர் என்னும் பெயர் கொண்ட தனி இலிங்கம் உள்ள கோவில், (4) சண்டிகேசுவரர் தனிக் கோவில், (5) சனிக் கடவுள் கோவில், (6) நவக்கிரகக் கோவில் (புதியது), (7) சுப்பிரமணியர் கோவில் (புதியது) முதலியன.

**சித்திரங்களும் சிற்பங்களும் :**

இறை அறை (மூலத்தானம்) வெளிச் சுவர்கள்மீதும் முன் மண்டபச் சுவர்கள்மீதும் கல்வெட்டுக்கள் காட்சி அளிக்கின்றன. கீழ்ப் பகுதியில் பெண், யானை, பிள்ளையார், இடக்கையில் கிளி ஏந்திய பெண், சிவபத்தர் மூவர், குரங்கு குட்டியின் தலையில் பேன் பார்த்தல் முதலியவற்றைக் குறிக்கும் உருவங்கள் செதுக்கப் பெற்றுள்ளன. பூ வேலைப்பாடு கண்டு களிக்கத் தக்கது. மற்போர், இசை, நடனம் இவற்றைக் குறிக்கும் உருவங்களும் கற்றூண்களில் காண்கின்றன. விநாயகர் சிலைக்கு இரு புறங்களிலும் உள்ள கற்சுவர்களிலேயே **குத்துவிளக்கு** அமைக்கப்பெற்றுள்ளமை கண்டு வியத்தற்குரியது.

**விமானங்கள் :**

சிவனார் திருமுன்மீதுள்ள விமானம் 1936இல் புதுப்பிக்கப் பட்டது. அம்மன் விமானம் பழையதே. இரண்டன்மீதும் சிதம்பரம் பேரம்பலத்துக் கூரைமீதுள்ள ஓட்டு வேலைப்பாடு அழகாகக் காணப்படுகிறது. விமானங்கள் செங்கல்லாலும் சுண்ணம் பாலும் ஆகியவை. சிவனார் விமானத்தில் தென்புறம் சனகாதியர்க்குச் சிவனார் மெய்ப்பொருள் உணர்த்துதலையும், கீழ்ப்புறம்

சிவனார் விடையூர்தியில் காட்சி தருதலையும், மேற்புறம் இரணியனைக் கொல்லும் நரசிம்ம நிலையையும், வடபுறம் பிரமன் காயத்ரி, சாவித்திரி என்னும் இரண்டு பெண்களுடன் நிற்றலையும் குறிக்கும் உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. புதுப்பித்த சிற்பி பிரகலாதனுக்குத் திறப்புச் சட்டை (Open coat) போட்டிருத்தல் வெறுக்கத்தக்கது.

**அம்மை அப்பர் திருமுன்கள் :**

சிவனார் திருமுன் உள்ள மண்டபத்திலேயே அம்மை திருமுன்னும் அமைந்துள்ளது. அதற்குப் பக்கத்தில் 200 கலம் நெல் கொள்ளத்தக்க பழங்காலக் களஞ்சியம் சுவரெடுத்துக் கட்டப் பட்டுள்ளது. அம்மன் பெயர் வேதநாயகி; அப்பர் பெயர் **திருமூல நாதர்**. மண்டபத்திலிருந்து அப்பர் திருமுன் செல்லும் வாயிலின் இரு பக்கங்களிலும் சுண்ணும்பால் செய்யப்பெற்ற **துவாரபாலகர்** உருவச்சிலைகள் உள்ளன. வலப்புறத்துச் சிலையின் ஒரு காலும் ஒரு கையும் பழுதுபட்டுள்ளன. இடப் புறத்துச் சிலையின் ஒரு காலும் ஒரு கையும் பழுதுபட்டுள்ளன. தலைகட்கு மேற்புறம் சுவர்மீது சிம்ம வேலைப்பாடு சுண்ணும்பால் செய்யப்பட்டுள்ளது. அப்பர் முன் உள்ள மண்டபத் தூண்கள் எட்டு. அவை, திருவக்கரையில் உள்ள கல் மண்டபத் தூண்களைப் போன்று உள்ளன. தூண்களில் 16 பட்டைகள், பட்டைகட்குமேல் பூ வேலை, அதற்குமேல் கொடி வேலை, அதற்கு மேல் சூலங்கள் நிறுத்தப்பட்ட நிலை முதலிய பல வகை வேலைப்பாடுகளுடன் அத் தூண்கள் இருளில் காட்சி அளிக் கின்றன. அவற்றுக் கடியில் **நிலவறை** இருக்கின்றது. **மூல இலிங்கம்** உளிபடாத தான்றோன்றி இலிங்கம்.

**உற்சவ மூர்த்தங்கள் :**

முதற் சுற்றின் வலப்புறம் உள்ள மண்டபத்தில் பல திரு வுருவங்கள் வைக்கப்பட்டுள்ளன. அவற்றுள் 'பிள்ளையார், முருகன் சோமாஸ்கந்தர், (தனி) அம்மன், சண்டிகேசுவரர், சந்திரசேகரர் மூர்த்தங்கள் பழையன. ஏனையன ஐம்பது ஆண்டுகட்கு முன்னரே செய்யப்பெற்றவை' எனக் கோவில் அர்ச்சகர் திருவாளர் **சின்ன சாமி குருக்கள்** செப்பினர். **அத்திக்கட்டை இலிங்கம்** ஒன்றும், அத்திக் கட்டையாலான அம்மன் சிலையும் பூசைக்கு உரியனவாக இருந்து வருகின்றன.

**சம்பந்தர் பாடல் பெற்றதா ?**

இக் கோவில் மிக்க பழைமையானது என்பதில் ஐயம் இல்லை. சோழர் காலத்துப் பழங்கோவில்கள் எல்லாம் சிறிய அளவில் செங் கல்லும் சுண்ணும்பும் கொண்டு கட்டப்பெற்றவை. அவை பிற்

காலப் பல்லவராலும் பிற்காலச் சோழராலுமே (கி. பி. 7ஆம் நூற்ருண்டு முதலே) கற்கோவில்களாக மாற்றப்பெற்றன. திருநாவுக்கரசர் காலத்தில் (கி. பி. 7ஆம் நூற்ருண்டில்) திருவதிகைக் கோவில் இருந்தவாறே பாகூர், திருவக்கரை, தில்லை, திருவையாறு முதலிய இடங்களில் இருந்த கோவில்கள் இருந்திருத்தல் வேண்டும். நால்வர்க்கு (கி. பி. 7ஆம் நூற்ருண்டிற்கு) முற்பட்டவர் எனக் கருதப்படும் கோச்செங்கட் சோழர் 70 கோவில்களைக் கட்டியதாகப் பெரிய புராணம் கூறுகிறது. அக் கோவில்களுட் பாகூரில் உள்ள பழங்கோவிலும் ஒன்ருகலாம். இக் கோவிலில் சம்பந்தர் உருவச் சிலை இருத்தலால், இத் தலம் சம்பந்தர் பாடல் பெற்றதாகலாம். பல தலங்களைப் பற்றிய தேவாரப் பாடல்கள் அழிந்தமைபோலப் பாகூரைப் பற்றிய பாடல்கள் அழிந்திருக்கலாம். திருவதிகைக்கு அணித்தாகப் பாகூர் இருத்தலால், அப்பராலும் இத் தலம் பாடல் பெற்றிருத்தல் கூடும். மேலும், இப் பதிக்குக் கிழக்கே **நான்குகல்** தொலைவில் கடல் ஓரத்தில் ஆராய்ச்சிக்கு உரிய மணல்மேடு ஒன்று மூர்த்திக்குப்பத்துக்கு அருகில் இருக்கிறது. அங்கொரு பழம் பெரும் பட்டினம் இருந்திருத்தல் வேண்டும் என்பதைச் 'செல்வி' யில் முன்னரே குறித்துள்ளோம். அங்கு இருந்து சாலைக்கு வரும் வழியில் பழைய பெருமாள் கோவிலும் திருக்குளமும் பழைய பார்ப்பனச் சேரியும் இன்றும் இருக்கின்றன. இவை அனைத்தையும் நோக்க, பெண்ணை யாற்றங்கரையில் உள்ள பாகூர் பழைமை வாய்ந்த ஊர் என்பதையும் அங்குள்ள சிவன்கோவிலும் தேவார ஆசிரியர்க்கு முற்பட்டது என்பதையும் ஒருவாறு உணரலாம்.

## 11. பெருமாள் கோவில், மாதா கோவில் ஆனமை

பாகூரில் மாதா-கோவில் ஒன்று இருக்கிறது. அஃது உள்ள இடத்தில் நூற்றுமுப்பது ஆண்டுகட்கு முன் பெருமாள்கோவில் இருந்தது. அக் கோவில் இடிக்கப்பட்டு மாதா-கோவில் கட்டப் பெற்றது. அக் கோவிலில் இருந்த சிலைகளுள் சிலவும் வழிபாட்டுக் கருவிகளுள் சிலவும் அக் கோவிலை அடுத்த பூந்தோட்டமாக இருந்த (இப்பொழுதைய வாழைத் தோட்டம் உள்ள) இடத்தில் உள்ள உறைகிணற்றுள் இருந்து நான்கு ஆண்டுகட்குமுன் எடுக்கப்பெற்றன. அவை யாவும் பூந்தோட்டத்தை அடுத்த துரோபதை அம்மன் கோவிலில் வைக்கப்பட்டுள்ளன. மாதா-கோவிலுக்குள் நிலத்தடியில் மறைப்புண்ட பழைய கிணற்றுள் பல உருவச்சிலைகளும் வேறு பொருள்களும் இருத்தல் கூடும் என்று பொறுப்புள்ள ஊர்மக்கள் புகல்கின்றனர். புதுவையில் பழைய **அகத்தீசர்** (சிவனுர்) **கோவில்** மாதா-கோவிலாக இன்று விளங்குதல்

போலப் பாகூரில் இருந்த பழைய பெருமாள் கோவில் இன்று மாதா-கோவிலாக இருத்தல் கவனிக்கத்தக்கது.

## III. கன்னிகோவில்

பாகூரில் இருந்து உந்து வண்டிப் பாதைக்கு வந்ததும் **கன்னி கோவில்** காட்சி அளிக்கிறது. அது சிறிய கிராம தேவதையின் கோவில் போன்றது. அதற்கு முன்புற வெளியில் **ஏழு முனிவர் சிலைகள்** செங்கல்லாலும் சுண்ணும்பாலும் செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் வாள்முனிவர் சிலையே மிகவும் பெரியது. எல்லாச் சிலைகளின் கால்களுக்கும் அடியில் பகைவர் தலைகள் அகப்பட்டுள்ளனபோலச் செய்யப்பட்டுள்ளன. அம் முனிவரைப் பற்றிய கதை இந்த நாடெங்கும் ஒன்றுகவே கூறப்படுதல் கவனிக்கத் தக்கது. வாள்முனிவர் ஊர்தியாக மண் குதிரை ஒன்று பெரிய அளவில் எதிரே நிறுத்தப்பெற்றுள்ளது.

கோவில் மண்டபம் பாழடைந்து கிடக்கிறது. உட்புறம் பாழான நிலையில் இருக்கிறது. தரை சீர்கேடாக உள்ளது. உள்ளே **பூங்குறத்தியர் எழுவர்** உருவங்கள் சுண்ணும்பாலும் களி மண்ணுலும் சுவர் ஓரமாக அமைக்கப்பெற்றுள்ளன. மரச்சிலைகள் சிலவும் கற்சிலைகள் சிலவும் காணப்படுகின்றன. பழைய **எடுப்புத் தேர்** ஒன்றும் புதிய எடுப்புத் தேர் ஒன்றும் இருக்கின்றன. முன்னது மேற்புறம் சதுரமான நிலைகளை உடையது; பின்னது கூம்பிய உச்சியை உடையது. உள்ளறையில் மன்னுர்சாமி (மணலிங்க ஈசர்) சிலையும் இருக்கிறது. ஏழு பெண்ணுருவங்களில் ஒன்றன் தலைமீது மற்றெரு பெண்தலை காண்கிறது. அதன் பெயர் **முடிமேல் முடி அழகி** என்பதாம். கோவிற்கூரை செங்கல்லும் சுண்ணும்பும் கொண்டது; அரைவட்ட உருவில் அமைந்தது. இக் கோவிலுக்கு எதிரே உள்ள குளம் தஞ்சாவூர் அரசர் கட்டினுர் என்பதைப் பூசாரி புகன்ருர். மேலும் அவர், 'நாங்கள் 30 தலைமுறையாக இக் கோவில் பூசாரி வேலை செய்து வருகிறேம்' என்ருர். வரலாற்று ஆசிரியர் கொள்கைப்படி தலைமுறைக்கு 30 ஆண்டுகள் கொள்ளினும், இக் கோவில் 900 ஆண்டுகட்கு முற்பட்டது என ஒருவாறு கூறலாம். மூவேந்தர் ஆட்சிக்காலத்தில் வீரர்கள் வழி பாடு பெற்றமையும் பத்தினிமார் வழிபாடு பெற்றமையும் அறிந்துள்ள அறிஞர், இக் கன்னி வழிபாட்டையும் முனிவர் எழுவர் வழிபாட்டை யும் புதியன என்று கருதார். பண்டை வீரர்கள் முனிவர்களாக மாறியதும் பெண்கள் சத்தியின் வடிவங்களாக மாறியதுமே இக் கால மாறுதல் என்பதை நூலறிவும் நுண்ணறிவும் உடையோர் நன்கு அறிவர்.

———

# வையத்து இறந்தார்

[பேராசிரியர் கொண்டல் சு. மகாதேவன், பி.எஸ்சி., எம்.ஏ.,
தமிழ் வளர்ச்சி இயக்குநர்]

பற்றுக்களைத் துறந்தவரின் பெருமை பெரியவற்றுள் எல்லாம் பெரியது என்பதை விளக்கவே,

"துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று"

என்னும் குறட்பாவினை வள்ளுவர் இயம்பிச் சென்றுள்ளார். இருந்தாலும் 'வையத்து இறந்தார்' என்ற இல்பொருள் உவமை நுட்பத்தை உரையாசிரியர் எவரும் புரிந்துகொண்டதாகத் தெரியவில்லை. உரையாசிரியர் இட்ட கோட்டினைத் தாண்ட விரும்பாத நாமும் இருவகைப் பற்றுக்களையும் விட்டாரது பெருமையை அளந்து கூறுதல் என்பது இவ்வுலகத்தில் பிறந்து இறந்தவர்களை எண்ணிக் கணக்கிடுவது போன்றது என்றே இன்றுவரை வெளிற்றுரை பகர்ந்துகொண்டிருக்கின்றோம்.

**பெரியதிற் பெரியது :**

இங்குத்தான் உலகப் பற்றை விடுத்துத் திகழும் தொண்டர் தம் பெருமையைப் பேச வந்த அவ்வையார் நம் உதவிக்கு வந்து நிற்கின்றார். அவர் 'வையத்து இறந்த' பல பொருள்களை அடுக்கிக் கூறி அவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்ட நிலையிலுள்ள அடியவரின் பெருமை சொல்லவும் பெரிது எனச் சொல்லிச் சென்றுளது நம் உள்ளத்தைத் தொடுகிறது. ஆம்,

"பெரிது பெரிது புவனம் பெரிது
புவனமோ நான்முகன் படைப்பு
நான்முகன் கரியமால் உந்தியில் வந்தோன்
கரியமாலோ அலைகடல் துயின்றோன்
அலைகடல் குறுமுனி அங்கையில் அடக்கம்
குறுமுனியோ கலசத்தில் பிறந்தோன்
கலசமோ புவியில் சிறுமண்
புவியோ அரவினுக்கு ஒருதலைப் பாரம்
அரவோ உமையவள் சிறுவிரல் மோதிரம்
உமையோ இறைவர் பாகத்து ஒடுக்கம்
இறைவரோ தொண்டர் உள்ளத்து ஒடுக்கம்
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே."

எனவே, துறந்தார் தம் பெருமைக்கு அளவுகோல் காண வேண்டு மானல் வையத்தினும் இறப்பப் பெரிதான ஒன்றை எண்ணிக் கொள்ள வேண்டியதுதானே வழி? அதனை விடுத்து நேற்று வரை உலகில் செத்துப் போனவரின் முகவரியைத் தேடிப் பட்டியல் தயாரிக்க முற்படுவது பற்றி யாரே எண்ணுவர்?

**வையத்திறந்த திருமால் :**

திருமாலின் பெருமையை அளவிட முயலும் இளங்கோ அடிக ளாரும் வேறு வழி காணுமல் திருமால் வையத்து இறந்து நின்ற செய்தியையே,

"மூவுலகும் ஈரடியால் முறைநிரப்பா வகைமுடியத்
தாவிய சேவடி......................"

எனப் பேசுகிருர்! வள்ளுவரும்,

"மாலும் குறளாய் வளர்ந்து இரண்டு மாணடியால்
ஞாலம் முழுதும் நயந்துஅளந்தான்"

எனப் பேசுவதை நாம் அறிவோம். திருப்பாவை 'ஓங்கி உல களந்த உத்தமன்' பேர் பாடுகிறது. சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணமோ சிவபெருமான் வையத்திறந்து நிற்கும் செய்தியை 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்' எனப் பேசுகிறது.

**வையத்திறந்த காதல் :**

சங்க காலத்துக்குச் சென்ருலோ, தலைவன்மீது கொண்ட அளத்தற்கரிய தனது காதலை,

"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரளவு இன்றே சாரல்
கருங்கோல் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனெடு நட்பே"

என 'வையத்து இறந்த' பெரும் பொருளாகப் பெருக்கிப் பேசும் தலைவியைக் காண்கின்ருேம்.

**இறந்தார் வாய்ச்சொல் :**

இறந்தார் என்று வருமிடங்களில் எல்லாம் செத்தார் என்று பொருள்கொண்டுவிடுதல் பொருந்தாது என்பதனை வள்ளுவர் 'இறந்தார் வாய் இன்னுச் சொல்' பற்றிப் பேசுவதிலிருந்தே எவரும் தெளியலாம்; ஆம், பொறையுடைமை என்னும் அதிகாரத் தில் வரும்,

"துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்
இன்னுச்சொல் நோற்கிற் பவர்"

என்னும் குறளில் வரம்பிறந்து நடப்பவரின் வாயில் பிறக்கும் கொடுஞ்சொல்லேயே 'இறந்தார் வாய் இன்னுச் சொல்' என்று பேசுகிருர். இறத்தல் என்பதனை வரம்பு கடத்தல் என்ற பொருளில் பின்வரும் குறட்பாக்களில் வள்ளுவர் ஆண்டிருப்பதையும் காணலாம்.

"இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை" (வெகுளாமை)

"இறந்த வெகுளியின் தீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியிற் சோர்வு" (பொச்சாவாமை)

"இறந்தமைந்த சார்புடைய ராயினும் உய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின்" (பெரியாரைப் பிழையாமை)

"இறப்பே புரிந்த தொழிற்றும் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்" (பெருமை)

எனவே, வள்ளுவர் வழிபடும் துறந்தார் தம் பெருமையின் அளவு பற்றிய நம் சிந்தனை வையங்கடந்து நின்ற பெரும்பொருளைச் சென்று எட்டட்டும். உரையாசிரியர் பின்சென்று பிறப்பு இறப்புக் கணக்கெடுக்கும் அலுவலராக ஆகிவிடாமல் நம்மை நாம் பார்த்துக் கொள்வோமாக!

வாழ்க வையத்திறந்தார்!

---

## அமெரிக்காவில் "சிவா"

அமெரிக்கர்கள் நம் சிவபெருமானின் பெயரை நம்மிடமிருந்து கடன் வாங்கியுள்ளனர்! கலிபோர்னியாவில் உள்ள லாரன்ஸ் லிவர்மோர் ஆய்வுக் கூடத்தில் மிகப் பெரிய அணு ஆற்றலை உண்டுபண்ணும் எரிபொருள் ஆராய்ச்சி நிலையம் ஒன்றினை அமைக்கும் திட்டம் உருவாக்கப்பட விருக்கிறது. அதற்கு "சிவா"த் திட்டம் எனப் பெயரிட்டுள்ளனர். நூற்றுக் கணக்கான இலக்கம் எரி ஆற்றலை ஒரு நொடிப் பொழுதினும் மிக நுண்ணிய மணித் துளியில் வெளிப்படுத்தும் ஒரு திட்டத்தின் துவக்க நிலையே இந்த 'சிவா' திட்டம் என்று அறிவியல் வல்லுநர்கள் கூறுகின்றனர். இத் திட்டம் நிறைவேற அவர்கள் 'சிவா'வின் அருளை எதிர் பார்க்கின்றனர்.

## 'டாக்டர்' பட்டம் பெறத் தமிழில் ஆராய்ச்சிக் கட்டுரை

இதுகாறும் பல்கலைக் கழகத்தில் 'டாக்டர்' என்னும் பண்டாரகர் பட்டம் பெறுதற்குரிய ஆராய்ச்சிக் கட்டுரைகளை ஆங்கிலத்தில்தான் எழுத வேண்டும் என்பது மரபாக இருந்து வருகிறது. ஆனால், சென்னைப் பல்கலைக் கழகத்தின் 120 ஆண்டுக் கால இந்த மரபினைப் பல்கலைக் கழக ஆராய்ச்சித் துறை மாணவர் ஒருவர் மாற்றிக் காட்டிய புதிய நிகழ்ச்சி யொன்று அண்மையில் சென்னைப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்றுள்ளது.

சென்னைப் பல்கலைக் கழகத்தின் இயைபியல் துறையைச் சேர்ந்த (Bio-chemistry) திரு. கே. மோகன் நமச்சிவாயம் என்னும் மாணவர் ஒருவர் "டாக்டர்" பட்டம் பெறுதற்காக ஓர் ஆராய்ச்சிக் கட்டுரையினை (Thesis) த் தமிழிலேயே எழுதி முடித்து, அதனைப் பல்கலைக் கழகத்தாரிடம் அளிக்கு முகத்தான் கடந்த 31-8-78இல், இயைபியல் துறைத் தலைமைப் பேராசிரியர்கள் டாக்டர் இ. ஆர். பி. சண்முகசுந்தரம், டாக்டர் ராதா சண்முகசுந்தரம் ஆகியோரும் மற்றும் சில மாணவர்களும் புடைசூழப் பல்கலைக் கழகத் தென் மூலையிலுள்ள கோகலே சிலையருகிலிருந்து ஊர்வலமாகப் புறப்பட்டு வரவேற்பறைக்குச் சென்று அதனை வழங்கினர்.

பேராசிரியர் சண்முகசுந்தரம் அவர்களைச் செய்தியாளர் கண்டு இது பற்றிக் கேட்டபோது, ஆராய்ச்சிக் கட்டுரைகள் ஆங்கிலத்தில்தான் வழங்கப்பட வேண்டும் என்று பல்கலைக் கழகச் சட்டத்தில் எத்தகைய திட்டவட்டமான அறிவிப்பும் இல்லை என்றும், இப்போது வழங்கப்பட்டுள்ள ஆராய்ச்சிக் கட்டுரையின் ஆங்கிலப் படியும் கைவசமே உள்ளதென்றும், இனி வருங் காலத்தில் தம்முடைய துறையில் வெளியிடப் பெறும் ஆராய்ச்சிக் கட்டுரைகட்குத் தமிழ்ப்படியும் வழங்கப்படும் என்றும் கூறினர்.

திரு. மோகன் நமச்சிவாயம் தமது ஆராய்ச்சிக் கட்டுரையினைத் தமிழில் உருவாக்குவதில் தமக்கு இடர்ப்பாடு ஏதும் ஏற்படவில்லை என்றும், கட்டுரைக்கு வேண்டிய கலைச் சொற்களையெல்லாம் ஆதார அடிப்படையில் வெளியிடப்பட்டிருக்கும் நூல்களிலிருந்தே எடுத்துப் பயன்படுத்தி யுள்ளதாகவும் குறிப்பிட்டார்.

அறிவியலில் ஆர்வமிக்கவரான பேராசிரியர் ஜி. ஆர். தாமோதரன் அவர்கள் பல்கலைக்கழகத் துணைவேந்தராகப் பதவி ஏற்றிருக்கும் இவ்வேளையில், அறிவியல் ஆராய்ச்சிக் கட்டுரை தமிழில் வழங்கப்பட்டிருப்பது, பேராசிரியரின் விருப்பத்திற்கு முன்னோடும் நிகழ்ச்சியாக அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

———

# சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்
# திரு. ஜி. ஆர். தாமோதரனர்

கோவை மாவட்டத்தில் கல்விப் பணி வளர அரும் பாடு பட்டுவரும் அறிவியல் பொறியியல் வல்லுநர் திரு. ஜி. ஆர். தாமோதரன் அவர்கள் சென்னைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராகப் பொறுப்பேற்றிருப்பது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். நீண்ட காலத்திற்குப் பிறகு இவ் வாய்ப்பு இவருக்கு அளிக்கப்பெற்றிருப்பினும் இவர் என்றும் இளைஞர் போல் சுறுசுறுப்பாகப் பணியாற்றும் இயல்புடையவராதலால் இப் பணியைச் சிறக்கச் செய்வார் என்பது உறுதி.



1914 பிப். 20இல் தோன்றிய இவர் பிரிட்டனில் பொறியியல் கல்வி பயின்றவர். கோவை நகரில் பி. எஸ். ஜி. கல்வி நிறுவனங்களின் வளர்ச்சிக்கு அயராது பாடுபட்டு வருபவர். பி. எஸ். ஜி. பொறியியல் கல்லூரியின் முதல்வராகத் தொடக்க முதல் இருப்பவர். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பல்வேறு குழுக்களிலும் ஆட்சிக் குழுவிலும் நீண்ட காலமாக உறுப்பினராக இருந்து வருபவர்.

அறிவியற் கல்வி தமிழில் வரவேண்டும் என்பதற்காக அயராது உழைத்து வருபவர். தமிழ்மக்களிடையே அறிவியல் அறிவு பரவ வேண்டுமென்பதற்காகக் 'கலைக்கதிர்' என்ற அறிவியல் திங்கள் இதழை 1948 இலிருந்து ஆசிரியராக இருந்து நடத்தி வருகிறார். அதனால் வருவாய் இல்லாது போயினும், சில சமயங்களில் பொருளிழப்பு ஏற்படினும் அதைக் கைவிடாது தொடர்ந்து 30 ஆண்டுகளாக நடத்தி வரும் பெருமை இவரையே சாரும். இத்தகைய அரிய தமிழ்ப் பற்றாளரும் கல்வித்துறை அறிஞருமான இவர் துணைவேந்தரானது தமிழ் மக்களுக்குப் பெரு மகிழ்ச்சியளிக்கும் செய்தியாகும்.

இச் 'செல்வி'யின் பொன் விழாக் குழுவில் இவர் ஓர் உறுப்பினராக இருந்து விழா சிறக்கவும் பொன் விழா மலர் பொலிவுற வெளிவரவும் துணையிருந்ததை நாம் மறக்க முடியாது. வாழ்க அவர் கல்விப்பணி.

———

# 'இந்து' நாளிதழின் நூற்றாண்டு விழா

இந்திய நாட்டின் தலைசிறந்த நாளிதழ்களில் ஒன்றான 'இந்து' இதழின் நூற்றாண்டு விழா 4-9-78 அன்று சென்னைப்பல்கலைக்கழக நூற்றாண்டு விழாவுக் கலையரங்கில் நடைபெற்றது. 1878 செப்டம்பர் 20ஆம் நாள் ஒரு கிழமை இதழாகத் தொடங்கப்பெற்ற 'இந்து' பின்னர் சிறந்த ஆங்கில நாளிதழாக மலர்ந்தது. திரு. ஜி. சுப்பிரமணிய ஐயர் உள்ளிட்ட ஆறு இளைஞர்களால் தொடங்கப்பெற்ற 'இந்து' இன்று தென்னிந்தியாவிலேயே தலைமை இடத்தைப் பிடித்துள்ளது. இதன் இதழ்கள் நம் நாட்டில் மட்டுமல்லாது பல வெளிநாட்டு நூலகங்களிலும் பாதுகாத்து வைக்கப் பெறுகின்றன. குறிப்பாகச் சொன்னால் 'இந்து'வின் பழைய நாளிதழ் ஒன்றைப் பார்க்க வேண்டுமானால் மிகக் கடினம். 'இந்து' அலுவலகத்தில் கூடச் சாதாரணமானவர்களால் பெறமுடியாது. ஆஸ்திரேலியாவிலுள்ள கான்பரா பல்கலைக் கழக நூலகத்திற்குச் சென்றால் ஒரு நொடியில் பழைய இதழ் கைக்கு வரும். அடுத்த நொடியில் அதன் படியும் படக்கருவியின் உதவியால் கிடைக்கும். இவ்வாறு உலகின் பல பெரிய நூலகங்கள் 'இந்து' நாளிதழ்களைப் பாதுகாத்து வைக்கின்றன.

இந் நூற்றாண்டு விழாவில் கலந்துகொண்ட அனைவரையும் இதழாசிரியர் திரு. ஜி. கஸ்தூரி அவர்கள் வரவேற்றார்.

விழாவில் கலந்து கொண்ட இந்தியக் குடியரசுத் தலைவர் மாண்பமை என். சஞ்சீவரெட்டி 'இந்து'வின் ஒருநூற்றாண்டுப் பணியை எடுத்துரைக்கும் பெரியதொரு நூலை வெளியிட்டார். தமிழக முதல்வர் மாண்புமிகு எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள், எந்தச் செய்தியையும் உண்மையானது என்று உறுதி செய்து கொள்ளாது 'இந்து' வெளியிடுவதில்லை என்று பாராட்டினார். தமிழக ஆளுநர் மாண்பமை பட்வாரி அவர்கள் கல்லூரியில் படித்த நாட்களிலிருந்தே 'இந்து' நாளிதழைப் படித்து வருவதாகக் கூறினார். விழாவில் முன்னாள் உச்சநீதி மன்றத் தலைமை நடுவர் இதயதுல்லா, ருக்மணிதேவி, என். வி. என். சோமு முதலியோர் பேசினர்.

கடினமான ஒரு நூறாண்டுக் காலத்தில் இந்திய விடுதலைப் போருக்காக 'இந்து' ஆற்றிய அரும்பணியை அந் நாளிதழ் 'நூற்றாண்டு விழா மல'ராகக் கொணர்ந்திருந்த 4-9-78 சிறப்பிதழ் நன்கு விளக்கியிருந்தது. ஆங்கிலம் அன்னிய மொழியாக இருப்பினும் அதையே கருவியாகக் கொண்டு இந்திய மக்களிடையே ஒற்றுமையை உண்டாக்கி அந்த அன்னிய மொழியைக் கொண்டுவந்த ஆங்கிலேயர்களையே இந் நாட்டை விட்டு விரட்டியடித்த பெருமையில் 'இந்து' நாளிதழுக்கும் பெரும் பங்குண்டு எனலாம்,

———

# செய்திகளும் குறிப்புக்களும்

## வைணவப் பாசுர இசையரங்கு

29-8-78 அன்று மாலை 6 மணி அளவில் சென்னை ஒய். எம். சி. ஏ. பட்டிமன்றத்தில் "வைணவப் பாசுர இசையரங்கு" என்னும் சிறப்பு நிகழ்ச்சி தமிழ்நாட்டுப் பொறுப்புச் சொத்து ஆட்சியர் நீதிபதி மாண்பு மிரு டி. என். சிங்காரவேல் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. பண்ணிசைத் திலகம் காஞ்சி வேங்கட வரதன் அவர்கள் தக்க பல்லியங்களுடன் ஆழ்வார், ஆச்சாரியார்கள் பாடல்களைத் தமிழிசையில் பாடினார்.

நடுவர் சிங்காரவேல் அவர்கள் தமது நிறைவுரையில் மிக நயமாகவும், உருக்கமாகவும், இவ்வளவு அழகாகவும் தமிழிசையில் பாட முடியுமென்பதைத் திரு. வேங்கடவரதன் அவர்கள் மெய்ப்பித்துக் காட்டியமையால் தாம் உணர்ந்துகொண்டதாகக் கூறிப் பாராட்டினார். மேலும் அவர் "சமயத்திற்காகத் தமிழா, தமிழுக்காகச் சமயமா? என்பது சிந்தனைக்குரியது; தமிழுக்காக இசையா, இசைக்காகத் தமிழா என்பதும் அது போன்றதே; ஏறத்தாழக் கடந்த 2000 ஆண்டுக் காலமாகவே நம் நாட்டில் சைவம், வைணவம் ஆகிய இருபெரும் வழிபாட்டு முறைகளும் வழங்கிவருகின்றன. 11 ஆம் நூற்றாண்டுக்குப் பின்வந்த இராமாநுசர் முதலிய ஆச்சாரியப் பெருமக்கள் வைணவத்தைச் சிறப்பாக வளர்த்துள்ளார்கள்; சாதி உடலைப் பற்றியது, மதம் உள்ள உணர்வைப் பற்றியது; ஒவ்வொரு திருமணத்திலும் ஓதுவார்களை வைத்துத் திருமுறைப் பாடல்களை ஓதச்செய்ய வேண்டும்" என்று குறிப்பிட்டார்.

பாராட்டுரை வழங்கிய தமிழ்நாடு இயல் - இசை - நாடக மன்றச் செயலாளர் திரு. டி. வி. நாராயணசாமி அவர்கள், "உள்ளம் உருக, மெய் சிலிர்க்க, நல்ல இராகங்களிலே, தகுந்த முறையில் மெட்டுகள் அமைத்துச் சிறப்பாகப் பாடினார்" என்று பாராட்டியதுடன், பெருமைக்குரிய பாசுரங்களையும், சமயக் கோட்பாடுகளையும் மக்கள் விளங்கிக் கொள்ளத்தக்க எளிய உரைநடை வடிவில் வெளியிட வேண்டுமென்றும், எல்லாச் சமயங்களுமே தமிழைப் போற்றித்தான் தமிழ்நாட்டில் வேரூன்றின என்றும் குறிப்பிட்டார்.

பேராசிரியர் கே. வி. இராமன், முதுபெரும்புலவர் சகநாதாச்சாரியார் ஆகியோரும் பாராட்டுரை வழங்கினர்.

## சென்னையில் மாபெரும் இந்தியெதிர்ப்பு மாநாடு

15-8-78 அன்று சென்னையிலுள்ள பெரியார் திடலில் அனைத்துக் கட்சியினர் இந்தியெதிர்ப்பு மாநாடு சிறப்பாக நடைபெற்றது. திராவிடர் கழகத்தினர் கூட்டிய இம் மாநாட்டிற்குச் செட்டிநாட்டரசர் அரசவயவர் முத்தையா செட்டியார் தலைமை தாங்கினார். திராவிடர் கழகப் பொதுச்செயலாளர் திரு. கி. வீரமணி அவர்கள் வரவேற்புரை

நிகழ்த்தினர். தவத்திரு குன்றக்குடியடிகளார் மாநாட்டைத் தொடங்கி வைத்து உரை நிகழ்த்தினர்.

கலைஞர் மு. கருணாநிதி, முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம், பாவலரேறு பெருஞ்சித்திரனார், திரு. அப்துல்சமது, திருமறவன், டாக்டர் ஏ. கிருட்டிணசாமி, திருவாட்டி அனந்தநாயகி, திரு. பி. மாணிக்கம், பர். சந்தோசம், குமரி அனந்தன், வேலூர் நாராயணன், கே. பி. கந்தசாமி, பிரான்சிசுராயன் முதலிய பல்வேறு கட்சிகளைச் சார்ந்த தலைவர்கள், தமிழ்ப் பேரறிஞர்கள், இதழாசிரியர்கள் ஆகியோர் இந்தியை எதிர்த்து முழங்கினர். இந்தித் திணிப்பைக் கண்டித்து நான்கு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

இந்தித் திணிப்பைத் தமிழ்நாட்டு மக்கள் ஒருமுகமாக எதிர்க்கின்றனர் என்பதை நடுவணரசுக்கு உணர்த்துமுகமாகவும், மாநாட்டின் அடுத்த நடவடிக்கையாகவும் 10-9-78 அன்று தமிழ்நாடெங்கும் கண்டனக் கூட்டங்கள் நடத்துவதாக அறிவிக்கப்பட்டது.

## நாடாளுமன்றத்தில் இராசாசி படம்

புதுத்தில்லியிலுள்ள நாடாளுமன்றத்தின் நடுக்கூடத்தில் 21-8-78 அன்று மூதறிஞர் இராசாசி அவர்களின் உருவப்படத்தைக் குடியரசுத் தலைவர் திருமிகு சஞ்சீவரெட்டி அவர்கள் திறந்துவைத்து உரைநிகழ்த்தினர். தலைமையமைச்சர் திருமிகு மொரார்சி தேசாய் அவர்களும் உரையாற்றினர். தென்னாட்டுத் தலைவர் ஒருவரின் படம் நாடாளுமன்றத்தில் திறந்துவைக்கப்படுவது இதுவே முதன் முறையாகும்.

## பீகார் மாநிலத்தில் பெரியார் நினைவுவிழா

நாடாளுமன்ற உறுப்பினரும், பீகார் மாநிலப் பிற்படுத்தப்பட்டோர் கழகத் தலைவருமான திரு. அவதேசசிங்கு அவர்கள் பெரியார் ஈ. வே. இரா. காமராசர், இராம் மனோகர் லோகியா ஆகியோர் உருவப் படங்களை நாடாளுமன்றத்தில் வைக்கவேண்டும் என்று வற்புறுத்தியுள்ளதோடு, பெரியார் நூற்றாண்டு விழாவைப் பீகார் மாநிலத்தில் சிறப்பாகக் கொண்டாட விருப்பதாகவும், 17-9-78 அன்று மாபெரும் பேரணி ஒன்றை நடத்தவிருப்பதாகவும், அதுமுதல் ஒருகிழமை பெரியார் நினைவுக் கிழமையாகக் கொண்டாட விருப்பதாகவும் தெரிவித்துள்ளார்.

## கலைவாணர் என். எஸ். கிருட்டிணன் நினைவு விழா

தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றத்தின் சார்பில் சென்னைக் கலைவாணர் அரங்கத்தில் 30-8-78 அன்று காலை மாலை இருவேளைகளிலும் கலைவாணர் என். எஸ். கிருட்டிணன் நினைவு விழா நடைபெற்றது. கவிஞர் சுரதா தலைமை தாங்கினர். கவியரங்கம், கருத்தரங்கம், வில்லுப்பாட்டு, கலைநிகழ்ச்சிகள் நடைபெற்றன. மாலையில் திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள் தலைமையில் கருத்தரங்கம் நடைபெற்றது. முதல்வர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன் அவர்கள் சிறப்புரை ஆற்றினர்.

## ‘திருமந்திரம்’ தொடர் சொற்பொழிவுகள்

வேலூர் மகிழ்நன் தமிழ்க் கழகத்தின் சார்பில் 20-8-78 முதல் ஞாயிறுதோறும், திவ்ய ஞானசபையில் மாலை 6-30 மணியளவில் பேராசிரியர் வி. மு. பழனி, எம். ஏ. அவர்கள் திருமூலர் அருளிய திருமந்திரம் பற்றித் தொடர் சொற்பொழிவாற்றுவார்கள்.

## ‘தனித் தமிழ்’ நூல் வெளியீட்டு விழா

திரு. க. தமிழமல்லன் அவர்கள் எழுதிய ‘தனித்தமிழ்’ என்னும் நூல் வெளியீட்டு விழா, புதுச்சேரி தனித் தமிழ்க் கழகத்தின் சார்பில் அரங்கப்பிள்ளை தெருவிலுள்ள திருமுடி சேதுராமன் இல்லத்தில் 6-8-78 அன்று நடைபெற்றது. விழாவிற்குப் பேராசிரியர் அ. பசுபதி அவர்கள் தலைமை தாங்கினார். திரு. சி. தமிழ்மாறன் க. இ. வரவேற்புரை நிகழ்த்தினார். புலவர் தி. நா. அறிவு ஒளி நூலை வெளியிடத் திரு. ந. விநாயகம் அதனைப் பெற்றார். புலவர் பெருமக்கள் பலர் பாராட்டுரை வழங்கினர்.

## ஞானப் பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள் திருவுருவப் படத் திறப்பு விழா

15-8-78இல், காஞ்சிபுரம் தொண்டைமண்டல ஆதீனம் 229 ஆவது குருமகா சந்நிதானம் சிலத்திரு ஞானப்பிரகாச தேசிக பரமாசார்ய சுவாமிகள் முதலாண்டு குருபூசையன்று அவர்களது திருவுருவப்படத் திறப்புவிழா சென்னை இராயப்பேட்டை அருள்மிகு பாலசுப்பிரமணிய பக்த ஜன சபையைச் சார்ந்த திரு. வி. க. மணிமண்டபத்தில் நடைபெற்றது. விழாவிற்கு ராவ் சாயிப் நல். முருகேச முதலியார் அவர்கள் தலைமை தாங்கினார்கள். திரு எம். எஸ். சாரங்கபாணி முதலியார் சுவாமிகளின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்தார். அறிஞர்கள் பலர் சிறப்புரை ஆற்றினர்.

## திருக்காவலூர்க் கலம்பகம் அவதான அரங்கேற்றம்

25-8-78 இல் குடந்தை சிறியமலர் உயர்நிலைப் பள்ளியில் புனித லூயிஸ் அரசர் விழா கொண்டாடப்பட்டது அப்போது வீரமாமுனிவர் அருளிய திருக்காவலூர்க் கலம்பகம் என்னும் நூலில், திருக்குறள் செல்வன் இரா. ஈசுவரன் அவதானம் செய்தான். பள்ளித் தலைமை ஆசிரியர் அ. லூயிஸ் அடிகளார் சிறுவனைப் பாராட்டித் திருக்காவலூர்ச் செல்வன் என்ற பட்டத்தையும், ஒரு பண முடிப்பையும் வழங்கி வாழ்த்தினர்.

## பேராசிரியர் மு. இராகவையங்கார் நூற்றுண்டுச் சிறப்பு விழா

இவ் விழா 7-9-78 இல் சென்னைப் பல்கலைக் கழக நூற்றுண்டு விழா மண்டபத்தில் முதுபெரும் புலவர் மே வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. புலவர் திரு. கி. வா. ஜகந்நாதன், டாக்டர் ச. வே. சுப்பிரமணியம்,

பேராசிரியர் ஜகந்நாதாச்சாரியார் ஆகியோர் பேராசிரியர் ஐயங்கார் அவர்களின் பணிகளையும் பண்புகளையும் பாராட்டிப் பேசினர்.

### கம்பன் திருவிழா

திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் 26, 27-8-78ஆம் நாள்களில் தமிழ்ச் சங்க மன்றத்தில் கம்பன் திருவிழா நடைபெற்றது. இதன் தொடர்பாகக் கருத்தரங்கம், பட்டிமன்றம் ஆகியன நடைபெற்றன. புலவர்களும் பேராசிரியர்களும், தமிழறிஞர் பலரும் பங்கு கொண்டனர்.

### மன்னார்குடிப் பெருமாள் கோயில் யானை மூன்று உயிர்களைக் காப்பாற்றி முழுஉணவுபெறுகிற வியத்தகு செயல்

மன்னார்குடி அருள்மிகு இராசகோபாலசாமித் திருக்கோயில் யானையை, மாவுத்தர் தம் வீட்டுக் கிணற்றுப் பக்கம் அழைத்துச் சென்றிருந்தார். நீர் முகக்கச் சென்ற அவர் மனைவியார் அக் கிணற்றில் தவறி விழவே, அவ் வம்மையாரைக் காப்பாற்ற எண்ணி மாவுத்தரும் கிணற்றில் குதித்தார். அவர்களுடைய மூன்றாண்டு ஆண் குழந்தை கிணற்று மதில்மேல் ஏறியது. அதைக் கண்ட யானை அக் குழந்தையைப் பிடித்துப் பாதுகாப்பான இடத்தில் விட்டுவிட்டுத் தொடர்ந்து பிளிறியது. அவ் வொலியைக் கேட்ட ஊர்மக்கள் ஓடிவந்து பார்த்து நடந்ததையறிந்து, கிணற்றில் கயிறுகளை விட்டு யானைப்பாகரையும் அவர் மனைவியையும் கரை யேற்றினர்.

கோயில் வருவாய் குறைவானமையால் யானைக்கு நிறைவாக உணவளிக்க இயலாத நிலை இருந்தமை யறிந்த ஆங்குள்ள தேசிய உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியரை யுள்ளிட்ட ஆசிரியப் பெருமக்கள் பிடியரிசித் திட்டம் வகுத்து வீடுதொறும் தண்டல் செய்து அந்த யானைக்கு முழுவுணவு வழங்கி வருகின்றனர்.

### தமிழகத்தின் புதிய கல்வித்துறை இயக்குநர்

தமிழக அரசின் பள்ளிக் கல்வித்துறை இயக்குநராக டாக்டர். கே. வேங்கட சுப்பிரமணியம் அவர்கள் அமர்த்தப் பெற்றுள்ளார். இதுவரை அரசுத் தேர்வு இயக்குநராக இருந்த இவர் இப் புதிய பொறுப்பை அண்மையில் ஏற்றுக் கொண்டுள்ளார்.

கல்வித்துறையில் பேரீடுபாடு கொண்ட இவர் இத் துறைக்குத் தலைமைப் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருப்பது பாராட்டுதற்குரிய செய்தியாகும். கல்வித் துறையில் வீண் செலவைத் தடுப்பதுபற்றி இவர் இலண்டன் நகரில் சென்று மேற்கொண்ட ஆராய்ச்சி அண்மையில் சென்னையில் நூல் வடிவில் வெளிவந்துள்ளது. கல்வித்துறைச் செயலர் திரு. சி. ஜி. அரங்கபாசியம், ஐ. ஏ. எஸ். இதனை வெளியிட்டுப் பாராட்டினார்.

இளமைத் துடிப்பும் ஆக்கப் பணியில் ஆர்வமும் உடைய இவர் இத் துறையில் புதிய பல சாதனைகளை ஆற்றுவார் என்பதில் ஐயமில்லை.

தமிழகக் கல்வி நிலை மேம்பட இவர் இடையுறாது பாடுபடுவார் என்று உறுதியாக நம்பலாம்.

## புதிய போப்பாண்டவர்

உலகெங்கணும் வாழும் கத்தோலிக்க சமயத்தினரின் சமய குருவாகப் போப் ஜான்பால் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். நூற்றுக் கணக்கான கார்டினல் பாதிரியார்கள் வத்திகான் நகரில் கூடி இவரைத் தேர்ந்தெடுத்துள்ளனர். ஏழை இத்தாலியக் கைவினைஞர் மகனான புதிய போப்பாண்டவர் தோற்றத்தில் எளியவர். பழகுதற்கினியர் எளிய வாழ்க்கையை விரும்புபவர். தம் பதவியேற்பு விழாவை எவ்வித ஆரவாரமும் வீண் செலவுமின்றி எளிய முறையில் நடத்தச் செய்தவர். உலகமக்கள் நன்மைக்காகத் தம்மாலான உதவிகளனைத்தையும் செய்யப் புதிய போப்பாண்டவர் உறுதியளித்துள்ளார்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் பரல்-கஉ, ருகூஆம் பக்கத் தொடர்ச்சி)

| | |
|---|---|
| உயர்திரு வ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக ஆட்சியாளர்—ஆக. 78) | ரூ. 10 00 |
| ,, ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக மேலாளர்—ஆக. 78) | ரூ. 5 00 |

---

# மதிப்புரை

## அருங்கலச் செப்பு

[பதிப்பாசிரியர்: டாக்டர். க. ப. அறவாணன். சைன இளைஞர் மன்றம், சென்னை. விலை. ரூ 9.00]

சமண சமயத்தைச் சார்ந்த இல்லறத்தார்க்கு அச் சமயத்தின் அற நெறிகளான நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்கம் என்னும் மும்மணிகளை விளக்கும் நூலே 'அருங்கலச் செப்பு' ஆகும். உரையாசிரியர் மூலத்திலுள்ள சமண சமயக் கருத்துக்களை நன்கு விளக்குவதோடு, நூலின் சொல்லடைவுகளையும் பின்னிணைப்பாகச் சேர்த்துள்ளமை ஆராய்ச்சியாளர்க்குப் பேருதவியாக அமைந்துள்ளது. டாக்டர் அவர்கள் படைப்பாற்றல் மிக்கவர், திறனாய்வு செய்வதில் வல்லவர் என்பதோடு, பதிப்புத் துறையிலும் வல்லவர் என்பதை விளக்க இந்நூல் ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. இவருடைய முயற்சி பாராட்டத்தக்கது. சைன இளைஞர் மன்றத்தார்க்கும் தமிழுலகம் கடப்பாடுடையது.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 80, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: வ. சுப்பையா.

பதிவு எண் : M. 4899



அப்பர் அச்சகம், சென்னை-1.